# கல்கி

...ீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...




KI • 25.04.2010 • ரூ.10.00 • 96 பக்கங்கள்

யின் புகைப்படம்!

றந்தவர்கள்
ிண்ணப்பிக்கலாம்!

டுவிட்டுக்
டுபாய்ந்து...

ாசகர்களுக்கு
திக் திக்' போட்டி!




## புத்தபிட்சு வேடத்தில் பிரபாகரன்?

- ஆவியுலகத் தகவல்!

# சிறுநீர் கசிவு பிரச்னையா?

இன்னும் ஏன் தயக்கம்?

நீங்கள் அணுக வேண்டிய சிறப்பு மருத்துவர்

## UROGYNECOLOGIST

இருமினாலோ, தும்மினாலோ சிறுநீர் கசிவு ஏற்படுகிறதா?

## "சிலிங் சிகிச்சை"

வலியில்லாமல், இரத்தக் கசிவில்லாமல் ஒரே நாளில் வீடு திரும்புங்கள். அமெரிக்காவில் UROGYNECOLOGY FELLOWSHIP பட்டம் முடித்த மருத்துவர்கள் உள்ள இந்தியாவில் முதல் ISO 9001:2000 Certified சிறப்பு மையம்

**இப்போது கோவையில்**

**பாலா மெடிக்கல் சென்டர் அண்டு ஆஸ்பிட்டல்,**

901, திருச்சி ரோடு,
இராமநாதபுரம்,
கோயம்புத்தூர் 641 045.
0422-2323456, 2323333

தங்கள் பிரச்னையை மேற்படி மையத்திலுள்ள முறையான பயிற்சி பெற்ற நபரிடம் தொலைபேசியில் தெரிவித்து கவுன்சலிங் அல்லது ஆலோசனை பெறலாம். ஆலோசனைக்குக் கட்டணம் எதுவும் கிடையாது!




**GUNA ASSOCIATES IN UROGYNECOLOGY & RESEARCH FOR INCONTINENCE (GAURI)**

1, Crescent Park Street, T.Nagar, Chennai - 600 017. Ph : 24341055, 24322591
E-mail : gunasek@gmail.com Web : www.urogynecology.in

# கல்கி
25.04.2010

## ஆன்மிகம்


## சிறுகதைகள்


## அரசியல்


## கீர்த்திக் ஸ்பெஷல்ஸ்


## சினிமா


## தொடர்கள்


## அமரர் கல்கி பக்கம்


அறிவிப்பு : 'அமானுஷ்யம்' – நமது வாழ்வில் விலக்கமுடியாத, முழுமையாக விளக்கவும் இயலாத ஒன்று. அமானுஷ்யத்தின் பரிமாணங்களை அவரவர் வாழ்வின் மூலமாக அணுகிப் பார்த்திருக்கிறோம் இவ்விதழில். அவரவர்களின் அனுபவக் கருத்துக்கள் கல்கி இதழின் பொதுக்கருத்து அல்ல.

– ஆசிரியர்

செல்வராகவன், அமீர், லிங்குசாமி... இந்த மூன்று இயக்குநர்களும் திரைத்துறையில் என்னுடைய இடத்தை அழகானதாகவும் வலிமையானதாகவும் ஆக்கித் தந்தவர்கள். அமீர், செல்வராகவன் படங்களுக்கு நான் எடுத்துக் கொண்ட சிரத்தையும், அவர்கள் என் கதாபாத்திரத்தை செதுக்கிய விதமும் அலாதியானது. ஆனால், அதிகமான நேரத்தை நான் அதில் இழக்க வேண்டியிருந்தது. அதிலிருந்து வெளிவந்து இளமையான நகரத்துப் பையன் போன்ற கேரக்டரில் நடிப்பதற்கு முடியுமா என்று யோசித்த காலங்கள் உண்டு. ஆனால், அதையெல்லாம் உடைத்து என்னை சாக்லேட் பாயாக, அழகான பையனாக 'பையா'வில் காட்டி அழகு பார்த்த லிங்குசாமிக்கு நன்றி'' என்கிறார் கார்த்தி. அண்ணன் சூர்யாவுடன் நீங்கள் இணைந்து நடிப்பீர்களா? என்று கேட்டால், ''சூர்யா ஹீரோவாக நடிக்கும் படத்தில் அவருக்கு வில்லனாக நடிக்க நான் தயார். அது போல கதை ரெடி பண்ண நீங்கள் தயாரா?'' என்று நம்மையே கேள்வி கேட்கிறார்.



# சூர்யாவுக்கு நான்தான் வில்லன்!




''நல்ல யதார்த்தமான படம். கொஞ்சம் செலவு பார்க்காமல், சிறப்பாக விளம்பரம் செய்தால், நல்ல பெயரை இயக்குநர் வெற்றி வீரனுக்குப் பெற்றுத் தரும்,'' என்று 'அரும்பு மீசை குறும்புப் பார்வை' படத்தைச் சிலாகிக்கிறார் வைரமுத்து. 'கொடி பறக்குது' படத்தில் 'சேலை கட்டும் பெண்ணுக்கொரு வாசம் உண்டு' என்ற பாடலை எழுதிக் கொடுத்தேன். படத்தின் இயக்குநர் பாரதிராஜா, அந்தப் பாடலை காஷ்மீரில் படமாக்கினார். ஹீரோயின் அமலாவைச் சுற்றிச் சுற்றி பத்து நடனப் பெண்கள் ஆட வேண்டும் என்பது இயக்குநர் பாரதிராஜாவின் திட்டம். ஆனால், சென்னையி லிருந்து காஷ்மீருக்கு அவர் கேட்ட நேரத்துக்கு அந்தப் பெண்களை அனுப்ப இயலவில்லை. உடனே, ''பத்து சேலைகளை அனுப்புங்கள்'' என்றார். அமலாவைச் சுற்றிலும் பத்து சேலைகளைப் பறக்கவிட்டே படமாக்கினார். அவரது சிஷ்யர் வெற்றிவீரன் இயக்கும் 'அரும்பு மீசை குறும்புப் பார்வை' படத்தின், ஒரு பாடலில் இருபது பெட்ஷீட்களை ஆட வைத்துப் படம்பிடித்திருக்கிறோம் என்கிறார்.

"ஹீரோவாக நடிக்க வரும் காமெடி நடிகர்களுடன் நடிப்பதற்கு தமிழ்த் திரைக் கதாநாயகிகள் மறுத்து விடுகின்றனர். இது வருத்தப்பட வேண்டிய விஷயம்" என்று வேதனைப்படுகிறார் 'அம்பாசமுத்திரம் அம்பானி' படத்தில் ஹீரோவாக நடிக்கும் காமெடி நடிகர் கருணாஸ். "நான் ஹீரோவாக நடித்து வெற்றிகரமாக ஓடிய 'திண்டுக்கல் சாரதி' படத்தில் ஹீரோயினாக நடிக்க ஒரு நடிகையிடம் கேட்டோம். அவர் மறுத்து விட்டார். பிறகு படம் வெற்றியடைந்ததும், ஐயோ அந்தப் படத்தில் நடித்திருக்கலாமே என்று வருத்தப்பட்டார். இதுகூட எனக்குக் கிடைத்த வெற்றிதான். அம்பாசமுத்திரம் அம்பானி படத்துக்காக சிம்ரன் முதல் இன்றைக்கு முன்னணியில் இருக்கும் அத்தனை கதாநாயகிகளிடமும் கேட்டும், அவர்கள் பதில் 'நோ'தான். இதனால்தான் ஒன்றிரண்டு படங்களில் ஹீரோவாக நடித்த காமெடி நடிகர்கள், மீண்டும் காமெடிப் பாதைக்குத் திரும்பி விடுகின்றனர்" என்கிறார் கருணாஸ்.






# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

ஆசிரியர் : சீதா ரவி
உதவி ஆசிரியர்கள் :
கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா
வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
பா.கோபால்
தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

ஆசிரியர் குழு :
044 - 4343 8822
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு :
044 - 4343 8811
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு :
044 - 4343 8833
subscription@kalkiweekly.com

விற்பனை பிரிவு :
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
www.sangapalagai.com

சந்தா விவரம் (ஒரு வருடம்) :
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

இதழில் வெளியாகும் விளம்பரங்களின்
உண்மைத் தன்மைக்கு
கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

● அ.அப்துல் காதர், சென்னை - 45

*? மும்பையில் சஞ்சய் காந்தி தேசியப் பூங்காவில் உள்ள இரு புலிகளின் பராமரிப்புச் செலவை ஏற்க சிவசேனா தலைவர் உத்தவ் தாக்கரே, முடிவெடுத்துள்ளாராமே?*

! அதைக் காட்டிலும் கேட்வே ஆஃப் இந்தியா அருகே உள்ள புறாக்களைப் பராமரிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருந்தால், ஏதோ மனமாற்றம் ஏற்பட்டு வருகிறது என நம்பலாம். புலிகளின் பராமரிப்பு அந்த நம்பிக்கையை அளிக்காதுடன் தோள்தட்டுவதாகவே தோன்றுகிறது.

● ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி

*? முதல்வர் 86 வயதிலும் நிறைய புத்தகங்கள் படிக்கிறார். அந்தப் படிப்புதான் அவரை மிகச் சிறந்த நிர்வாகியாக ஆக்கியிருக்கிறது என்று அமைச்சர் பொன்முடி கூறியிருக்கிறாரே?*

! உண்மைதான். அவரிடம் உள்ள பல பிளஸ் பாயிண்ட்டுகளுள் இதுவும் ஒன்று. சில மைனஸ் பாயிண்ட்கள் இருப்பதால் பிளஸ் பாயிண்ட்டுகளை யாரும் ஒதுக்கிவிட முடியாது; மாட்டார்கள்.

● கே.என்.சுப்பிரமணியன், சென்னை -15

*? நீதிபதி தினகரனை விடுமுறையில் செல்ல அறிவுரை கூறப்பட்டும், அவர் அதனை ஏற்காமல் இருப்பது நீதித் துறைக்கு விடப்பட்டுள்ள சவால்தானே?*

! நிச்சயம் சவால்தான். வேறு வழியின்றி அவரை சிக்கிம் மாநிலத்துக்குத் தலைமை நீதிபதியாக மாற்றல் போட, அங்குள்ள வழக்கறிஞர்கள், 'எங்களுக்கு ஊழல் நீதிபதி வேண்டாம்' என்று ஆட்சேபிக்க, தினகரன் அழுக்கலாகச் சிரிக்கிறார். ''நீதிபதிகள் சட்டத்துக்கு அப்பாற்பட்டவர்கள் அல்ல; தினகரன் மீது உடனே வழக்கு தொடர வேண்டும்'' என்ற வி.ஆர்.கிருஷ்ணய்யரின் கருத்து சரியானது.

● சி.அனுஷா, சென்னை - 116

*? மேலவையைத் திரும்ப கொண்டு வர முதல்வர் முடிவெடுத்துள்ளாரே?*

! மேலவையின் மேலான நோக்கம், அறிஞர்கள், பல்துறை வல்லுனர்களின் அறிவார்ந்த யோசனைகள் மாநில நிர்வாகத்தை உயர்த்த உதவும் என்பதே. அந்த நோக்கம் நிறைவேறும் வகையில், மேலவை உறுப்பினர் தேர்தலும் நியமனங்களும் இருக்க வேண்டும். அவர்கள் தரும் நல் ஆலோசனைகள் ஏற்கப்படவும் வேண்டும். இல்லாவிட்டால், இன்றைய மேலவை வெறும் அலங்காரத்துக்கும் அதிகார துஷ்பிரயோகத்துக்குமானதாகிப் போகும்.

● ஜி.ஜெயராமன், கூந்தலூர்

*? எது அலட்சியம்? எது கவனக்குறைவு?*

! முற்றுப்பெறாத பாலத்தின்மீது ஏறுவதைத் தடுக்கும் வண்ணம், ஒரு தடுப்பு அமைக்காமல் விட்டது அலட்சியம். அதை அறியாமலேயே காரை ஓட்டிச் சென்றதால் உண்டான விபத்து, கவனக் குறைவு.

● கோதாவரி, பொள்ளாச்சி

*? சாலை விரிவாக்கத்துக்காக நடைபாதை கோயில்களை இடிப்பதில் தவறென்ன? எல்லாம் மக்கள் நன்மைக்குத் தானே?*

! இடிப்பதற்கு முன்னதாக இடம் மாற்றலாம். அருகிலேயே உள்ள, பெரிய கோயில்களில், சாலையோரக் கோயில் விக்ரகங்களை மாற்றி அமைத்தால், பக்தர் மனங்கள் புண்படாமல் இருக்கும்.

● குலசை க.மீ. நஜ்முதீன், காயல் பட்டினம்

*? சானியா மிர்சா - சோயப் மாலிக் காதல் பற்றி?*

! திருமணத்தில் முடிந்தது பற்றி சந்தோஷம். புதிதாகத் தோன்றியுள்ள கிசுகிசு காரணமாக விரிசல் விழாமலிருந்தால் அதைவிட சந்தோஷம்!

● லெ.நா.சிவகுமார், சென்னை - 3:

*? தாங்கக் கூடியவர்களுக்குத்தான் மின் கட்டண உயர்வு; சாதாரணமானவர்களுக்கு*

# மீண்டும் மேலவை..?

***அல்ல என்று முதல்வர் அறிவித்துள்ளாரே?***

! தாங்கக் கூடியவர்கள் என்று முதல்வர் குறிப்பிடுவது, முக்கியமாகப் பெரிய பெரிய தொழிலகங்கள், நிறுவனங்கள்தாம். அவை உற்பத்தி செய்யும் பண்டங்கள், வியாபாரப் பொருள்களின் விலை உயரும். கடைசியில் எல்லாவற்றையும் சுமப்பது ஏழைகள், மத்திய தர வர்க்கத்தினர்தான். மழை, மலை உச்சியில் பெய்தாலும், நீர் சமவெளிக்குத்தான் வந்து சேரும்.

● ***சரா.ஏ.முரளி, கள்ளக்குறிச்சி*** ★

***? சுவிஸ் வங்கிகளில் உள்ள இந்தியர்களின் கறுப்புப் பணத்தை இந்தியாவுக்குக் கொண்டு வரும் திட்டம் கிடப்பில் போடப்பட்டுள்ளதே?***

! ஐயோ பாவம் நீங்க! உளவாக்கட்டிக்குச் சொல்லப்பட்டதையெல்லாம் நிஜம் என்று நம்பிக்கிட்டு... சுவிஸ் வங்கிப் பணமெல்லாம் இறக்கை கட்டி வந்துடும்னு நினைச்சீங்களா? அம்புட்டுக் கட்சிக்காரங்களுக்கும் அங்கே அக்கவுண்ட் இருக்கு அண்ணே! சுவிஸ் வங்கிக் கணக்கில் ரகசியப் பாதுகாப்பு உண்டு. ஆனால், சட்டவிரோதமான பணத்துக்கு அங்கே பாதுகாப்பு கிடையாது. சட்டவிரோதமான வருமானம்னு நிரூபிக்கணும்; அவ்வளவுதான். அதை நம்மவங்க செய்யமாட்டாங்க.

● ***அ.சுஹைல் ரஹ்மான், திருச்சி***

***? வேலூர் அரசு மருத்துவமனையில் பணி நேரத்தில் வெளியில் சென்ற மூன்று டாக்டர்கள் சஸ்பெண்ட் செய்யப்பட்டிருப்பது பற்றி?***

! சஸ்பெண்டு ஆனது வரை மகிழ்ச்சி. என்ன நடவடிக்கை எப்போது எடுக்கப்படும் என்பதை சஸ்பென்ஸாக வைக்காமலிருந்தால் நல்லது. பொதுவாகவே கடமை தவறும் அரசு ஊழியர்கள்மீது உடனடி நடவடிக்கை தேவை; டாக்டர்கள் தப்பு செய்தால் மன்னிப்பே கிடையாது. ஸ்டெத் அணியவே தகுதியற்றவர்களாகிறார்கள்.

● ***ப.கோபிபச்சமுத்து, கிருஷ்ணகிரி***

***? விளையாட்டை ஊக்குவிக்கும் வகையில், நம் கல்விமுறை இல்லை என வருந்தியிருக்கிறாரே மத்திய அமைச்சர் எம்.எஸ்.கில்?***



● பேசும் பெருமை

★ படிப்பின் மேன்மை

நீங்கள் கேட்டவை - திராக



● உறுமும் புலி!



● விளையாட்டு வருத்தம்



● அழுக்கல் சிரிப்பு!



● நியாயக் கருத்து

! கல்வியையே நமது மத்திய - மாநில அரசுகள் விளை யாட்டாக்கிக் கொண்டிருக்கின்றன என்பதால் அதற்கெல்லா அவசியமில்லை எனக் கருதியிருக்கக் கூடும்.

● எஸ்.சாந்தி, காட்பாடி

*? தமிழக அரசின் கோபுரச் சின்னம் மாற்றப்பட வேண்டு என்று விடுதலைச் சிறுத்தைகள் கேட்க ஆரம்பித்துள்ளனரே?*

! அரசுச் சின்னம் மதச் சார்பற்றதாக இருக்க வேண்டும் என் காரணம் கூறுகிறார்கள். சின்னத்தை உருவாக்கிய அறிஞர்களுக் நமது மதச் சார்பின்மை தெரியாததல்ல. கட்டடக்கலை ரீதியி தமிழகக் கோயில் கோபுரங்கள் தனித்தன்மை வாய்ந்தவை. கோபுர உடனடியாகத் தமிழகத்தை உணர்த்தும். அதற்காகத்தான் கோபு சின்னமே தவிர, மதத்துக்காக அல்ல. மேலும், அசோகரின் சிங்க சின்னமும் தேசியக் கொடியும் அதில் உண்டு.

● பி.பரத், அண்ணாமலை நகர்

*? மக்களுக்கு எந்த இலவசமும் வேண்டாம். அரசு ஊழியர்க லஞ்சம் வாங்காமல் தங்கள் கடமையைச் செய்தாலே போதுட மக்கள் சந்தோஷமாக இருப்பார்கள் - இது என் கருத்து. சரிதானே*

! கடலில் அலைகள் ஓய்வதானால் அரசு அதிகாரிகள் லஞ்ச வாங்காமலும் இருக்கக்கூடும். உங்கள் ஆசைக்காக அப்படி ஒ வேளை நடந்துவிட்டால், மக்கள் சந்தோஷம் அடையவே செய்வா கள். ஆனால், இலவசங்கள் பெறுகிறபோது, அவர்கள் அடையு

ரூ.150 பரிசு பெறுபவர் :
**கே.என். சுப்பிரமணியன்,**
சென்னை - 15

ரூ.75 பரிசு பெறுபவர் :
**சரா.ஏ.முரளி,**
**கள்ளக்குறிச்சி**

சந்தோஷம் அதைவிடப் பல மடங்கு அதிகம். இந்த பலவீனத்தை தான் அரசியல்வாதிகள் பயன்படுத்திக் கொள்கிறார்கள்.

● பவானி கிருஷ்ணா, பெங்களூரு

*? பென்னாகரம் இடைத் தேர்தலில் டெபாசிட் இழந்த நிலை மையை மறைக்க வேறு எந்த வழியும் தெரியாத ஜெயலலித மின் வாரியத்தின் மீது சேற்றை வாரி இறைக்கிறார், என முதல்வ சொல்வது பற்றி...?*

! சேற்றை வாரி இறைக்கவில்லை. கருணாநிதி முகத்தில் க பூசினார். அதை மத்திய அமைச்சர் வந்து சோப்பு போட்டு அல பினார். நிலக்கரி இறக்குமதி மர்மம் ஒருபுறம் இருக்க, மின் வாரிய தில் நீண்ட காலமாக லஞ்ச ஊழலே கிடையாது என்று நம்ப யாரு தயாராயில்லை. எனவே, பென்னாகரம் தோல்விதான் ஜெ.வி இந்தக் 'குற்றச்சாட்டுக்கு'க் காரணம் என்று முடிவுகட்ட முடியாது

**வேலுப்பிள்ளை பிரபாகரன் கொல்லப்பட்டதாக அறிவித்தது இலங்கை ராணுவம். பிரபாகரன் மரணம், உலக நாடுகளின் பார்வையை இலங்கையின் மீது, மீண்டும் குவியச் செய்தது. ஆனால், விடுதலைப்புலிகள் இயக்கத்தின் ஆதரவாளர்களோ, பிரபாகரன் மரணத்தை இன்னமும் நம்ப மறுக்கின்றனர். இலங்கை அரசோ பிரபாகரன் மரணச் சான்றிதழை இன்னமும் இறுதி செய்யவில்லை...**

ஆவியுலகம் மீடியம் வாயிலாக பிரபாகரன் ஆவியோட பேசுனா என்னங்கற ஐடியா தோணுச்சு. உடனே ஆவியுலகத்தில் சர்வதேச மீடியம் ஆக, நமக்கு அடையாளப் படுத்தப்பட்ட சேலம், மலர் சந்திரசேகரனைத் தேடிப் புறப்பட்டோம்.

ஆவிகளைத் தேடிப் போக பகலை விட, இரவுதான் தோதான நேரம்னு சொன்னதால, சேலத்துல சந்திரசேகரன் வீட்டுக் கதவைத் தட்டினப்ப இரவு மணி பதினொண்ணு.

கதவு திறந்திச்சு. எதுத்தாப்ல நின்னவரைப் பார்த்தா, அவரே ஒரு ஆவி மாதிரிதான் தெரிஞ்சாரு. எதுக்கும் நமக்கு ஒரு பாதுகாப்பா இருக்கட்டுமேன்னு, சேலத்துலேர்ந்து ஒரு அக்குபஞ்சர் டாக்டரை கூட்டிட்டுப் போயிருந்தோம்.

**"செத்தவந்தான்டா ஆவியா வருவான். உசுரா இருக்கறவன் எப்பிடிடா வருவான்!"**

வீட்டு மொட்டை மாடியில கீற்றுக் கொட்டகைதான், மலர் சந்திரசேகரனோட ஆவியுலக வாசம். பிளாஸ்டிக் சேர்ல பேன்ட் சட்டையோட ஒக்காந்தவரு, சட்டையைக் கழற்றி விட்டெறிஞ்சார். கழுத்துல நீளமா ருத்ராட்ச மாலை ஆவியுலகத்துல சஞ்சரிக்க ஆரம்பிச்சாரு "விடுதலைப் புலிகள் இயக்கத் தலைவர் பிரபாகரன் ஆவியைக் கூப்பிடுங்க!"னு நாம சொன்னதுதான் தாமதம். துள்ளிக் குதிக்க ஆரம்பிச்சிடுச்சி ஆவிகளோட அதகள ஆட்டம்.

"செத்தவந்தான்டா ஆவியா வருவான் உசுரா இருக்கறவன் எப்பிடிடா ஆவியா வருவான்?"னு ஆவியுலக லாஜிக்கை எடுத்து வைச்சுது! உடம்பெல்லாம் முறுக்கிட்டு, மூஞ்செல்லாம் அஷ்டகோணலாக்கி நம்பளை மொறைச்சிப் பார்த்திச்சு. 'கே



## ஆவியுலகத் தகவல்

# பிட்சு வேடத்தில் பிரபாகரன்!?

கக்கூடாததைக் கேட்டுட் டோமோ!'னு நமக்கு உடலெல் லாம் வியர்த்து விறுவிறுத்து வுட்டுச்சு. அந்த நேரத்துல கூரையைப் பிய்ச்சுக்கிட்டுப் போறாப்பல பேய்க் காத்து வீசுனாலும். நமக்கு வியர்வை மட்டும் அடங்கலை.

''அப்ப... பிரபாகரன் சாகலையா? அப் படின்னா பிரபாகரன் எங்கே?''னு நம்ப ளோட அந்த உதறல்லயும் அடுத்த கேள் நம்ம உலக லாஜிக்கை வீசுனோம். ரொம்ப உச்சாட்டமா ஆயிடுச்சு வந்திருந்த ஆவிக்கு. இதெல்லாம் சேலம் அக்குபஞ்சர் மருத் துவர் பாலு, Intra Spectral Imaging System Camera மூலமா படம் புடிச்சிட்டு இருந்தார். (காண்க: படங்கள்).

''அவுரு தப்பிச்சுப் போய்ட்டார்யா. நிலமும் தண்ணியும் இணைஞ்ச எடத்து லேந்து, தண்ணீக்குள்ளாரயே தப்பிச்சுப் போய்ட்டார். கூடவே எமகாதகன் ஒரு ஆளு துணைக்குப் போயிருக்கான். இப்ப... அந்த ரெண்டு பேரும் எங்கே இருக்காங்கன்னா கேட்டே? கொஞ்சம் பொறு.. அதுக்கும் பதிலைச் சொல்லிடு றேன். எம் பார்வைக்கு பெரிய தீவாட்டம் ஒன்னு தட்டுப் படுதுய்யா. அங்ஙன மலையும் இருக்கு. பனியும் இருக்கு. அந்த ரெண்டு ஆளுங்களும் அங்ஙனத் தான்யா பத்திரமா இருக்காங்க. இலங்கை அதிபர் ராஜபக்ஷே மேல அடங்காத கொலைவெறியோட அந்த மலையங் காட்ல இருக்காங்க. அவுங்களெ யாரா லயும் அடையாளம் காண முடி யாது. ஏன்னா, மொகத்தலயும் தலை யிலும் வளர்ற முடியை மழிச்சிட்டு புத்த பிட்சு மாதிரி எம் பார்வைக்குத் தெரியுறாங்க!'' என்று சொல்லிவிட்டு மயங்கி விழுந்தார் சந்திரசேகர்.

இதெல்லாம் எப்பிடி நம்புறதுனு, ஆவி அடங்கிப் போனதும் நமக்கே கொஞ்சம் தெகிரியம் வந்துடிச்சு. நம் புறதும் நம்பாததும் உன் இஷ்டம். அதுல எனக்கேதும் கஷ்டம் இல்லேங்கற பாணி யில, சில ஆதாரங்கள மேஜை மேல தூக்கிப் போட்டாரு மலரு.

அட... சந்தனக் கடத்தல் வீரப்பன் ஃபோட்டோ. அவனோட முழுக்கைச் சட்டையோட பட்டன் உள்ள மணிக் கட்டுப் பகுதி சின்ன கிழிஞ்ச துணியாட் டம். அப்புறம் அவனோட ஜாதக நகல்! ''என்ன சாமீ இதெல்லாம்?''னு கேட் டோம்.

''வீரப்பன் சாவுறதுக்கு ஒரு வருஷத் துக்கு முன்னாடி, இந்தப் பொருளையெல் லாம் காவல் துறையில சில பேரு என்ட்ட கொண்டாந்து தந்தாங்க. ஆவிய



* மலர் சந்திரசேகரன்

வரவழைச்சு வீரப்பன் சாவு எப்ப நடக்கும்... எப்படி நடக்கும்னு''ல்லாம் என்ட்ட துளைச்சு எடுத்தாங்க. வீரப்பன் சாவு, என் உடம்புல பூந்திருந்த ஆவி



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 2010

**முதல் பரிசு - ரூ.10.000**
**இரண்டாம் பரிசு - ரூ.7.500**
**மூன்றாம் பரிசு - ரூ.5.000**

---

**த**விர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. **500** சன்மானம் பெறும்.

யார் வேண்டுமானாலும், எத்தனை கதைகள் வேண்டுமானாலும் எழுதலாம். என்றாலும், எழுதுபவர் முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராகவோ அல்லது அறிமுக எழுத்தாளராகவோ இருந்தால் சிறப்புப் பரிசு உண்டு.

★ **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2010'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், கல்கி, கல்கி பில்டிங்ஸ்,**
**47-NP ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032.**

✱ **கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 15.** மேலும் விவரங்களுக்கும் விதிமுறைகளுக்கும் சென்ற வார இதழைப் பார்க்கவும்.

**- ஆசிரியர்**

சொன்ன மாதிரிதான் நடந்திச்சு.

இதுக்கு முன்னாடி, 'ராஜீவ்காந் படுகொலை ஆகப் போறார். அவரை சேஃப வெச்சுக்கங்கன்'னு சோனியா காந்திக் ஃபேக்ஸ் பண்ணியிருந்தேன். அவரோ படுகொலைச் சம்பவத்துக்கப்புறம் சிறப்பு புலனாய்வு என்னியக் கூட்டிட்டுப் போ விசாரிச்சது. நான் ஃபேக்ஸ் பண்ணியிருந் நாட்கள்லயே, இந்தியாவின் சில பகு கள்லேர்ந்து ஜோதிடர்களும், ஆவியுலக மீ யங்களும் தந்தி கொடுத்திருந்து இருக்காங் நான் எச்சரிச்ச விஷயத்தையே, அமானுஷ் சக்தியால மத்தவங்களும் முன்கூட்டியே சொல்லியிருந்ததாலே என்னிய சும்ம வுட்டாங்க!" என்கிறார் அவர்.

**ஏ**து எப்படியோ, தற்போது ஆவியுல மீடியம் வாயிலாக, பிரபாகரன் குறித்தா புதிர் நிறைந்த புதுத்தகவல் வெளிப்ப டுள்ளது.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



✱ ஆவியோடு பேச துவங்கும் முன்...



* Intra Spectral Imaging System Camera மூலம் படம் பிடித்தது...

''இளைஞர் காங்கிரஸில் நடந்து முடிந்துள்ள நிர்வாகிகள் தேர்தல், கோஷ்டிப் பூசலை மேலும் வளர்த்துவிடும். ஒற்றுமையைக் குலைத்துவிடும்'' என்கிறார்கள் காங்கிரஸ் ஸீனியர்கள்!

'அட, உட்கட்சி ஜனநாயகம் உருப்படியா செயல்படுதே' என்று மகிழும் வண்ணம்தான் தேர்தல் நடைமுறை ஆறு மாதங்களுக்கு முன் துவங்கியது. ராகுல் காந்தியின் நேரடி வழிகாட்டுதலில் மொத்தம் பதிமூன்று லட்சம் இளைஞர்கள் வாக்காளர்களாகச் சேர்க்கப்பட்டனர். இதில் முதல்கட்ட வட்ட நிர்வாகிகள் தேர்தலில், வோட்டு போட்டவர்கள் ஒன்பது லட்சம் பேர். பல இடங்களில் மோதலால் வன்முறை வெடித்தது. இடைத் தேர்தல் பாணியில் பணம் விளையாடியது என்றும் சொல்கிறார்கள். இறுதியாக 4225 பேர் வாக்களித்தனர். தலைவர் தேர்தலில் 1327 வாக்குகள் பெற்று வென்றவர் யுவராஜா. இவருக்குப் பின்னால் 1023 வாக்குகள் பெற்று துணைத் தலைவரானவர் வரதராஜன்.

வாசன் கோஷ்டியைச் சேர்ந்த யுவராஜா வெற்றி பெற்றாலும், அந்தக் கோஷ்டி தமிழக காங்கிரஸில் தனது செல்வாக்கை இழந்து வருகிறது என்று சொல்கிறார்கள் கார்த்தி சிதம்பரம் அணியைச் சேர்ந்தவர்கள். 304 வாக்குகள் வித்தியாசத்தில் தோற்ற வரதராஜன், கார்த்தி சிதம்பரத்தின் அணி.

''முன்பு இருந்த 54 இளைஞர் காங்கிரஸ் தலைவர்களில் 41 பேர் வாசன் தரப்பு. இந்த அடிப்படையில் 39 பாராளுமன்றத் தொகுதிகளில் அவர்கள் 32-ல் வெற்றி பெற்றிருக்க வேண்டும். ஆனால் 18-ல் தான் வென்றுள்ளனர். மாறாக 4 எம்.எல்.ஏ.க்கள் மற்றும் 2 எம்.பி.க்கள்தான் எங்களுக்காக வேலை பார்த்தனர். பத்து பாராளுமன்றத் தொகுதிகளில் வென்றுள்ளோம். இதன்மூலம் வாசன் அணியின் சரிவு தெரிகிறது. எங்க கார்த்தி கலக்குறார்!'' என்கிறார் அவ்வணியின் முன்னணிப் பிரமுகர் ஒருவர்.

# "கலக்குறார் கார்த்தி!"



''கார்த்தியிடம் சிபாரிசுகளுக்குச் சென்றால், காரியங்கள் செய்து கொடுக்கிறார். இதனால்தான் கார்த்தி அணி தனி முத்திரையைப் பதித்திருக்கிறது. தேர்தல் முறையிலும் சில மாற்றங்கள் தேவை. 40, 50 வோட்டுக்கள் வாங்கி பொதுச் செயலர் ஆகியிருக்கிறார்கள். இது சரியல்ல என்கிறார். வாசன் தரப்புப் பிரமுகர். இந்த இரு அணிகளைத் தவிர இளங்கோவன், கிருஷ்ணன் அணியினரும் சில இடங்களில் வென்றிருக்கிறார்கள்.

''இந்த அணி அந்த அணி என்று சொல்வதெல்லாம் சரியல்ல. நாங்கள் அனைவரும் ராகுல் வழிகாட்டுதலில் செயல்பட்டு தமிழகத்தில் காங்கிரஸ் ஆட்சியைக் கொண்டு வருவோம்'' என்று நம்மிடம் வழக்கம்போல் காங்கிரஸ் பிராண்ட் சபதம் செய்தார், புதுத் தலைவர் யுவராஜா!

– ப்ரியன்

● சாரதா, மதுரை

***ஊரான் பிள்ளையை ஊட்டி வளர்த்தால், தன் பிள்ளை தானே வளருமா?***

தன் பிள்ளையைத் தான் வளர்க்காது, ஊரான் பிள்ளையை ஊட்டி வளர்த்துக் கொண்டிருந்தால், தன்னை கவனிக்காத 'தன்' பிள்ளை கோபித்து வீட்டை விட்டு ஓடிப் போய் ''தென்பாண்டி சீமையிலே'' பாடி 'தானே' வளரும்!

● ஜனனி, சென்னை

***கிரேஸி நீங்க ஏன் எப்பவும் 'சான்ட்ரோ' கார்ல போறீங்க... பெரிய கார் எப்ப வாங்கப் போறீங்க...?***

ஆட்டுக்கு வாலை அளந்து வச்சா மாதிரி, என் வீட்டுக் Wallஐ அளந்து வச்சுட்டாங்க. சின்ன 'சான்ட்ரோ' கார்தான் கொள்ளும். பெரிய கார் வாங்கினா, கார்ல வீட்டைப் பார்க் செய்துவிட்டு, நாங்க கார்லதான் குடியிருக்கனும்!

● என்.பாலகிருஷ்ணன், மதுரை

***''பாம்பென்றால் படையும் நடுங்கும்''... ''தம்பி உடையான் படைக்கு அஞ்சான்'' இந்த இரண்டு பழமொழிகளையும் இணைத்து ஒரு புது மொழி சொல்ல முடியுமா?***

''பாம்புத் தம்பியென்றால் படையும் நடுங்கும்''... ''படைக்கும் அண்ணன் பாம்பில் படுக்க அஞ்சான்''.. இதுல, அவதார புருஷனான அண்ணன் ராமன் படைக்கும் பெருமாள் மகாவிஷ்ணுவின் அம்சம்... அண்ணன் அஞ்சாமல் துஞ்சுவது ஆதிசேஷன் படுக்கையில்.. தம்பி லக்ஷ்மணன் ஆதிசேஷனின் அம்சம்... ராமானுஜர் லக்ஷ்மணனின் அம்சம் உடையவர்... அண்ணன் ராமன் எனக்கு அண்ணல் ராமன்...ஸோ, ''அண்ணனையும் அவர் தம்பி உடையவரையும் உடையோன் விடைக்கு அஞ்சான்!''

# சிறகில்லா தேவதை!

● எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்

***அப்பாவி எப்போது 'அடப்பாவி' ஆகிறான்?***

தைரியம் வந்து அப்பாவி 'ட' போட்டு பேசினால் 'அடப்பாவி' ஆகிறான்!

● ராகவன், கும்பகோணம்

*நிறைய மச்சம் இருக்கும் என் ாதலிக்கு ஒரு செல்லப் பெயர் சொல் ஙகளேன்?*

நீங்கள் எதிர்பார்ப்பது மச்ச கன்னிகை. து பழகு... Fe'mole' என்று புது 'சல்லத்துடன் கூப்பிடுங்கள்!

● பா.அசோக், திருவில்லிப்புத்தூர்

*காதலி தேவதையென்றால்... ானைவி?*

மனைவியும் தேவதைதான்... மைனஸ் றகு.

வ.வைகுண்டம், சென்னை

*உங்களை மகிழ் விக்கும் பட்டம்?*

'காத்தாடி' ாமமூர்த்தி!

வெ.ராம்குமார், வலூர்

*இந்த வயதி யும் உடலைக் கச் தமாக வைத் ருக்கிறீர்களே..?*

வாக்கிங்கால் கச்சி ம்... இல்லையேல் கை-கச்சிதம்'!



# கிரேஸியைக் கேளுங்கள்

● மு.மதிவாணன், அரூர்

*மனிதனிடம் இருக்கும் மகத்தான சக்தி து?*

மெமரி. எவ்வளவோ சக்திகள் இருந்தா யும் மெமரியைத்தான் ஞாபகசக்தி என் றோம். மற்ற சக்திகளை மறக்காமல் ருக்க, ஞாபகசக்தியைத்தான் நம்ப வேண்டும்!

● ராணி, தஞ்சை

*மனித மனத்தை எதனுடன் ஒப்பிட ாம்...?*

எதையும், எப்போதும் ஒப்பிட்டுப் பார்க் நம் மனதுக்கு, உவமானம் சொல்வது திரு ன் கையில் சாவி கொடுப்பதற்கு ஒப்பா தம்!



# கல்கி



2010 ஏப்ரல் 25
விக்ருதி சித்திரை 12
மலர் : 68
இதழ் : 39

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## அச்சுறுத்தும் அணுத்தொழில்நுட்பம்!

அமெரிக்காவில் அணுசக்திப் பாதுகாப்பு மாநாட்டில் பங்கேற்க நமது பிரதமர் சென்ற வேளையில், இங்கே புதுடெல்லி காயலாங் கடை ஒன்றில், கதிர்வீச்சினால் ஆறு பேர் கடுமையாகப் பாதிக்கப் பட்டுள்ளனர்! அமெரிக்க மாநாடு அணு ஆயுதங்கள் பற்றியது மட்டுமல்ல; அணுசக்தி உற்பத்தியும் பயன்பாடும் நிகழ்கின்ற பல்வேறு களங்களில், தீவிரமான கண்காணிப்பு தேவை என்பதை வலியுறுத்தும் மாநாடாகும்.

அணு ஆயுத உற்பத்தி ஆரம்பித்தபோது, அந்தத் தொழில்நுட்பம் ரகசியமாக இருந்தது. இன்றோ, தகவல்புரட்சி காரணமாக, அணுகுண்டை வீட்டுக் கொல்லையில் தயாரிக்கும் அளவுக்குத் தொழில்நுட்ப விவரங்கள் பரவலாகிவிட்டன. பயங்கரவாதிகளின் கையில், அணுஆயுத உற்பத்திக்கான தொழில்நுட்பமும் கனிமங் களும் கிடைத்துவிட்டால், என்ன ஆகுமோ என்ற கவலையை அமெரிக்க மாநாடு வெளிப்படுத்தியிருப்பதுடன், பாதுகாப்பையும் கண்காணிப்பையும் வற்புறுத்தியிருக்கிறது.

அணுத் தொழில்நுட்பப் பயன்பாடு ஆயுதங்கள் தயாரிப்பில் மட்டுமின்றி, உணவு தானியங்கள் கெடாமல் சேமித்தல், மருத்துவத் துறை (கதிர் இயக்கச் சிகிச்சை முறைகள்), மின்சக்தி உற்பத்தி ஆகிய் பிரிவுகளிலும் உண்டு. கதிர் இயக்கப் பாதிப்புகள் மற்றும் விபத்துகளின் அபாயமும் இந்தத் துறைகளில் மலிந்துவிட்டன.







ஞ்ஞான, தொழில்நுட்ப நெறிமுறைகள் விதிக்கும் பாதுகாப்பு ஏற்பாடுகள், எல்லா டங்களிலும் சீராகக் கடைப்பிடிக்கப்படுவதில்லை என்பதே அதிர்ச்சி தரும் உண்மை. நறிப்படுத்த வேண்டிய அரசு அமைப்புகளில் லஞ்ச-ஊழல் மலிந்துபோயிருக்கிறது ன்பதையும் மறுக்க முடியாது.

டெல்லி கதிர்வீச்சு விபத்துச் சம்பவம் இதற்கு ஓர் உதாரணம். தகர சாமான்கள் வாங்கி ிற்கும் காயலான்கடையில், கோபால்ட் கதிர்வீச்சு விபத்து எவ்வாறு நிகழ்ந்தது? அதில் ாதிக்கப்பட்ட ஆறு பேர், எலும்பு மஜ்ஜை மாற்று தேவைப்படும் அளவுக்கு மரணத்தின் ிளிம்பில் உள்ளனர்! தாங்கள் அபாயகரமான பொருட்களைக் கையாள்வது தெரியாமலே இயங்கியிருக்கின்றனர்.

இதற்கிடையே வெளிப்பட்டிருக்கும் மற்றொரு அதிர்ச்சிகர உண்மை, நமது இந்திய ருத்துவமனைகளிலிருந்து வெளிப்படும் கதிரியக்கத்துடன் கூடிய கழிவுகளில் ஐம்பது சதவிகிதம், முறையாக அகற்றப்படுவதில்லை; பொதுக் கழிவோடு சேர்க்கப்படுகிறது. ன்பதே! இதனால் நோய்த் தொற்று மட்டுமின்றி, கதிரியக்கப் பேரபாயமும் உண்டு.

இதே போன்ற பேரபாயம், அணுத்தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தும் மின் உற்பத்தி, உணவு தானிய சேமிப்பு, ஆயுத உற்பத்தி ஆகிய களங்களிலும் அச்சுறுத்திக் கொண்டிருக்கிறது. அறியாமையோ, சதியோ, ஒரே கணத்தில் இக்களங்களை மானுடத்தின் அழிவுக் களங்களாக மாற்றிவிட முடியும்.

அணு ஆயுத உற்பத்தி மட்டுமின்றி, அணுத் தொழில்நுட்பமே மறுபரிசீலனைக்கு உட்படுத்தப்படுவது அவசியமாகிறது. இதில் உலக நாடுகள் ஒன்று சேர்வதற்கு, அமெரிக்கா வழிகாட்டட்டும். இந்தியா ஒத்துழைக்கட்டும். ●

"எனக்கு இன்விக்கு ஹேப்பி பர்த்டே, டாடி பெரிய்ய... கேக் வாங்கியிருக் காரு. ஸோ... யம்மி... ஜாலி..." என்று பரவசப்படாத குழந்தைகளும் உண்டா? 'கேக் கட் பண்ணாமல் பர்த்டே கொண் டாடியதே கிடையாது என்று அழுத்தத் திருத்தமாக சொல்லிப் பெருமைப்படும் பெற்றோர்களே அதிகம்.

★ கேக்கை முதலில் கண்டுபிடித்தது கிரேக்கர்கள். (கிராதகர்கள்... எல்லாவற் றிலும்) ஆனால், அதற்குப் பெயர் 'ப்லேகா வுஸ்'. 'கேக்' அல்ல.

★ ரோமானியர்கள் 'கேக்'குக்கு 'ப்ளெ ஸெண்டா' எனப் பெயரிட்டனர்.

★ கேக் என்ற திருநாமம் வந்ததே 13-ம் நூற்றாண்டில்தான்! 'காக்கா' என்ற ஜெர் மானிய வார்த்தையிலிருந்து மருவி வந்த தாம். (காக்கா பிடிக்க கேக் கொடுத் திருப்பாங்களோ)

★ இங்கிலாந்தில் கேக்கை 'பேஸ்ட்ரீஸ்' என்றனர். பர்த்டே கேக் செய்யும்போது, அதனுள் காயின் மற்றும் திம்பிள்ஸ் (நாணயம்+மெட்டல் தொப்பி) சிம் பாலிக்காக வைத்து பேக் செய்வார் களாம். யாருக்கு நாணயம் கிடைக்கிறதோ அவருக்கு அளவற்ற செல்வம் வந்து சேருமாம். ஆனால், யார் கையில் மெட்டல் தொப்பி கேக் பீஸ் கிடைக்கிறதோ அவ ருக்கு திருமணமாகாதாம்! இப்படியொரு நம்பிக்கை.

★ 14-ம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் ப்ரொஃபஷனலாக கேக் செய்வது எப்படி, ஈஸ்ட், உலர் பழ வகைகள் கொண்டு, ஸ்பெஷல் நாட்களில் செய்து அசத்துவது எப்படி என சமையல் நிபுணர்கள் கற்றுத் தேர்ச்சி பெற்றனர்.

★ 16-ம் நூற்றாண்டில் இத்தாலியிலும் பிரான்சிலும் ஒரு கேக் புரட்சி. ஈஸ்டைப் புறக்கணித்துவிட்டு முட்டை + சர்க் கரையை நுரையாக அடித்து கேக் கலவை யில் சேர்த்தார்கள்.

★ மெல்ல மெல்ல அவரவர் கற்பனைக் கேற்ப, கேக்கில் பல வடிவங்கள், மணங் கள், லெமன், ஆரஞ்சு, வெனிலா சாக் லேட்... என இதுவரை சக்திக்கு மீறி வாங்க முடியாத பொருட்களாகக் கருதப்பட்டதைத் துணிந்து, வாங்கி கேக் செய்தனர். (ஆடி தள்ளுபடி, அட்சய த்ருதியை இல்லாம லேயே ஸேல்ஸ் எக்கச்சக்கமுங்க.)

★ 19-ம் நூற்றாண்டின் தொடக்கத் திலேயே, பேக்கிங்குக்கு தேவையான பொருட்கள் ஈஸியாகக் கிடைக் கவே, அமோகத் தொழில் வளர்ச்சி, பேக்கிங் சோடா, பேக்கிங் பவுடர் போன்றவை புழக்கத்தில் வர, கேக் கம்பெனிகள் சக்கைப் போடு போட ஆரம் பித்தன.

● பர்த்டே மட்டுமல்லாது திருமணத் தன்றும் கேக் வெட்டுவது மேல் நாட்டு கலாசாரம். வெட்டிங் கேக் என்பது

## டேஸ்டி டூர்!

## ◄ லதாசேகர் ►



வளமை + செழுமையைக் குறிக்கிற தாம்.

● ரோமானியர்கள் பார்லி மற்றும் கோது மையினாலான கேக்கை மணப்பெண்ணின் தலையில் போட்டு உடைப்பார்களாம். இத னால் செழுமை பெருகும் என நம்பினர். பிறகு சிறிது மாறி சின்னச் சின்ன கப் கேக்கு களை செய்து மணமகள்/ன் இருவர் தலை மீதும் ஏகமாக அடுக்கிவிட்டு, ஒரு கப் கூட கீழே விழாமல் இருவரும் கிஸ்



# கடவுளுக்கு அப்ளிகேஷன்!

பண்ண வேண்டும். (கமலின் அடுத்த படத்தில் இதை எதிர்பார்க்க லாம்). பண்டைய ரோமாபுரிக் கலா சாரம் இங்கு வரலாம். இதை படித்த பிறகு...!

● கேக்கை வெட்டுவதற்கு முன்னால் மெழுகுவர்த்திகளை அணைக்கும்போது, மனத்தில் ஏதாவது ஒரு வேண்டுகோள் (விஷ்) வைத்து ஊதி அணைக்க வேண்டு மாம். ஒரே ஊதலில் எல்லா மெழுகுவர்த்தி களும் அணைந்தால், உங்கள் ஆசை நிறை வேறுமாம்.

● கேக் பேக் செய்யும்போது கீழே விழுந்தால் (அபசகுனமாகக் கருதி அஞ்சு வார்களாம்.) 'பேட் லக்' என்று பொருள்.

● பண்டைய காலத்தில் திறந்த வெளியில் தீயிட்டு, வட்டமாக நின்று கடவுளிடம் பிரார்த்தனை செய்வார்களாம். தங்களுடைய கோரிக்கைகளை புகை, கடவுளிடம் கொண்டு சேர்த்துவிடும் எனவும் நம்பினர்.

அதற்கு கேக், கடவுளிடம் கொடுக்கும் அப்ளிகேஷன் போலச் செயல்பட்டதாம். நாமும் ஒரு அப்ளிகேஷன் போட்டால் என்ன?



'**கொ**டுக்கிற தெய்வம் கூரையைப் பிய்த்துக் கொண்டு கூடக் கொடுக்கும்' என்று குமார் கேள்விப்பட்டிருக்கிறான். ஆனால் ஒரு பக்கடா கட்டிக் கொடுத்த பொட்டலம் வழியாக எல்லாம் கூட, அது கொடுக்க முற்படும் என்பதுதான் அவனது அனுபவம்!

குற்றாலம் வந்த இடத்தில் தள்ளு வண்டிக்காரன் ஒருவன் பக்கடா போட்டு, எல்லோர் மூச்சையும் உரசிக் கொண்டிருந் தான். குளித்து விட்டு வந்த உற்சாகம், சாரல் போடும் இதமான க்ளைமேட். நடு வில் டீயும், பக்கடாவும் என்பது, இந்திர சிம்மாசனம் கிடைத்து அதில் அமர்ந்து கொண்டு, ரம்பையின் டான்ஸ் பார்க்கிற மாதிரியான ஒரு அனுபவமல்லவா?

குமாரும் அந்த அனுபவத்துக்கு ஆளான போதுதான், அந்தப் பக்கடா கட்டிக் கொடுத்த காகிதம் 1992-ம் வருடத்து டைரி யின் ஒருநாள் பக்கம் என்பது தெரிந்தது. அதில், ஒருவர் எழுதிய நாள் குறிப்புகளும் கண்ணில் பட்டு, குமாரை இப்போது பொதிகை மலை உச்சிக்குத் தன்னந்தனி யாக தள்ளிக் கொண்டு வந்திருக்கிறது.

# ரசவாதம்

நடுநடுவே அந்தத் தாளை எடுத்துப் பார்த்துக் கொண்டான்.

இன்று என் வாழ்வில் ஒரு மறக்க முடியாத நாள்.

பொதிகை மலை மேல் வடக்கும் கிழக்கும் முட்டிக் கொள்ளும் ஈசான்ய பாகத்தில் 'அம்பிருக்கை' என்னும் இடத்தில் நான் சரவண சித்தரைத் தரிசனம் செய்தேன்.

'சரவண சித்தரின் திருமுகம் போற்றி
சரவண சித்தரின் திருவடி போற்றி
சரவண சித்தரின் அருள்நெறி போற்றி
சரவண சித்தரின் சாகா ஒளி போற்றி'

எனும் மந்திரத்தை லட்சத்தி எட்டு முறை ஜெபித்தால், அவர் பிரசன்னமாவார்; கேட்டதைத் தருவார் என்பது என் வரையில் சத்தியமானது. அம்பிருக்கை சுனையருகில் உள்ள பாறை மேல் அமர்ந்து நான் அவரை உபாசனை செய்து லட்சத்தி எட்டு முறை, ஜெபிக்கவும்.... அவரும் 'அழைத்தாயா அப்பனே...?' என்று கேட்டபடியே என் முன் பிரசன்னமானார்! நான் அவரிடம், வாய் பேச முடியாத என் ஊமைத் தங்கையின் எதிர்காலம் பற்றித்தான் கேட்டேன். என் தங்கையைத் திருமணம் செய்து கொள்ள முன்வருபவர்கள் குறைந்தபட்சம் நூறு பவுனாவது போட வேண்டும் என்று கேட்டது எவக்கொன்றும் பெரிய தவறாகப் படவில்லை.

இவி மாதிரி பெண்ணுக்கே இன்று வர தட்சணை தந்தால்தான் திருமணமாகிறது. சரவண சித்தரும் என் குறையைப் போக்கும்விதமாய், அப்போது என் வசம் இருந்த... நான் வேலை பார்த்த கடையின் சாவிக் கொத்தில் இருந்து, எப்போதாவது எனக்கு வரும் காக்காய் வலிப்பு நோய் நிமித்தம் நான் நிரந்தரமாகக் கையில் போட்டிருந்த இரும்புக் காப்பு வரை... சகலத்தையும் கேட்டு வாங்கிக் கொண்டு, மறுநாள் அதே இடத்தில் என்னைச் சந்திக்கச் சொல்லிவிட்டு, இப்படி என்று திரும்புவதற்குள் மறைந்து விட்டார்.

மறுநாள் நான் அவரைச் சந்திக்கப் போனபோது அந்தப் பாறைமேல் என் கடை சாவிக் கொத்து, என் இரும்புக் காப்பு என எல்லாமே தங்கமான நிலையில் ஒரு சிறு பானைக்குள் கிடந்தது. அவர் வரவில்லை! ஆனால், அவர் என் தங்கை வாழ்க்கைக்கு உதவி செய்து விட்டது மட்டும் புரிந்தது. அப்போதுதான் இரும்பைத் தங்கமாக்கும் ரசவாதம் எவ்வளவு உண்மை என்பதை நான் உணர்ந்து கொண்டேன்!'

என்பது வரை அந்த டைரி தாளில் இருந்தது. எழுதியது யார், அவர் பெயரென்ன என்று எதுவும் தெரியவில்லை. ஆனால், சரவண சித்தர் பற்றியும், அவரை லட்சத்தி எட்டு முறை ஜெபித்தால் தரிசிக்க முடியும் என்பதும் அந்த பக்கடாத் தாள் வழியாகத் தெரிந்து விட்டது.

இரும்பைத் தங்கமாக்க முடிந்த அவர் தான் சாகாவரம் பெற்றவராயிற்றே?

குமாரும் அந்த வடகிழக்கு முனையில் உள்ள அம்பிருக்கைக்கு வந்து சேர்ந்தான். வெளியே ஒருவரிடமும் மூச்சு விடவில்லை. விஷயம் தெரிந்தால், சரவண சித்தர் பற்றிய செய்தியும் மந்திரமும் பரவி போட்டி அதிகமாகி விடும். சில பகுத்தறிவுச் சிங்கங்கள் 'எலே கோட்டிப்பயலே! இந்த பக்கடாப் பேப்பர் கிறுக்கலையா நீ நம்பறே? உன்னை எல்லாம் சக்கரைத் தண்ணில குளிப்பாட்டி எறும்புப்புத்துல உருட்டி விடணுமடா' என்றும் கொக்கரிக்கலாம்...

எதற்கு வம்பு?

குமாருக்கும் நிறையத் தேவைகள் இருந்தன.

அட யாருக்கு இல்லை...? அம்பானிக்கே தொண்டைக்குழி அளவுக்கு கவ

லைகளும், விருப்பங்களும் இருக்கும் போது குமார் என்ன குமார்...?

அவனுக்குள் இப்போது ஏராளமாய்த் திட்டங்கள். சரவணசித்தர் வந்தால் அவரிடம் தங்கம் கேட்கக்கூடாது. தங்கம் செய்யும் அந்த ரசவாத ரகசியம்தான் வேண்டும். பெட்ரோலை வைத்துக் கொண்டு உலகத்தையே ஆட்டிப் படைக்கின்றன வளைகுடா நாடுகள்! வருஷம் முழுக்க அங்கே அக்னி நட்சத்திரம்தான்... இருந்தும் எல்லோரும் ஜில்லென்று வாழ்க்கை நடத்துகிறார்கள்.

அமெரிக்க அதிபருக்கோ, அவர் யாராக இருந்தாலும் தான்தான் பூலோக இந்திரன் என்கிற ஒரு நினைப்பு...



-ராஜசீலன், ராஜபாளையம்

கங்காரு தேசம் ஒரு ஓரமாய் ஒழுங்காய்த்தான் இருந்தது. ஆனால், அங்கேயும் இப்போதெல்லாம் இந்தியன் என்றாலே தர்ம அடி!

உலகத்துக்கே ஞானத் தந்தை என்றால் இந்தியாதான்.

தமிழ் மொழியும் அதன் இலக்கணமும் போதுமே... நமது தொன்மை, வன்மையைத் தன்மையாகக் காட்ட...? ஆனாலும், இங்கேதான் சுத்தமான தண்ணி லிட்டர் பன்னிரண்டு ரூபாய்க்கு விற்கிறது.

சரவண சித்தரிடம் சொல்லி, 'சாமி! தங்கம் பண்ணும் அந்த ரகசியத்தை தயவு செய்து சொல்லுங்கள்; அதை வைத்தே உலக நாடுகளை எல்லாம் அடக்கித் திருத்தி, நம் மக்களின் வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்திக் காட்டுகிறேன்' என்பதுதான் குமாரின் திட்டம்!

இவ்வளவு பெரிய வித்தையைக் கையில் வைத்துக் கொண்டு, இப்படியா காட்டுக்குள் எனக்கென்ன என்று இருப்பீர்கள்? ஒரு மூக்குக் கண்ணாடியைக் கண்டு பிடித்தவனுக்கெல்லாம் வரலாற்றில் இடம்கொடுத்து சிலை எல்லாம் வைத்திருக்கிறது உலகம்.

நீங்கள் மட்டும் தங்கம் செய்யும் இந்த ரகசியத்தைச் சொல்லிவிட்டால், அதன் பின், உலகின் எல்லோருக்குமான சர்வமதத்தவர்களும் கும்பிடும் முதல் சாமியே நீங்கள்தான்! அதன்பின் இந்தியாதான் உலகின் தலைநகரம்.

சாமி இது தெரியாமல், இது புரியாமல் இந்தக் காட்டுக்குள் அப்படி என்னதான் செய்து கொண்டிருக்கிறீர்கள்?

குமார் கொந்தளித்துப் போனான்... பாறை மேல் அமர்ந்து சரவண சித்தருக்கான மந்திரத்தையும் சொல்ல ஆரம்பித்தான்.

'விடமாட்டேன் சாமி... நான் உங்களை உலகத்துக்கே கடவுள் ஆக்கப் போறேன்!' என்று நடுநடுவே கலைந்தும் போனான். அதன் பின் படாதபாடுபட்டு அந்த லட்சத்தி எட்டை எட்டியும் விட்டான். சரவணசித்தரும் 'அழைத்தாயா அப்பனே' என்று முன்னால் வந்தார். ஒரு கோவணம்தான் கட்டியிருந்தார். ஒரு மனிதனின் உடம்பில் அவன் எடைக்கு எடை முடி முளைக்க வாய்ப்பிருப்பதை அவரை வைத்தே தெரிந்து கொண்டான்.

கண்ணிரண்டும் எண்ணெய் பூசித் துடைத்த கருநீல உருண்டைகளாய்

ஜொலித்தன.

'சாமி வந்துட்டீங்களா?'

அவர் சிரித்தார்.

'என் நம்பிக்கை வீண் போகல. அந்த சாமி பக்கோடா பேப்பர் ரூபத்துல எனக்கு வழிகாட்டிட்டான்.'

'நல்லதப்பா! எதுக்குக் கூப்பிட்டே?'

'எதுக்கா..? சாமி உங்களுக்கே இது நியாயமாப்படுதா? இந்த உலகமே தங்கம்னா வாயைப் பொளக்குது. பெரிய பெரிய சாமிங்களுக்கே கூட தங்க கோபுரம் தான் பிடிச்சிருக்கு. அதை இந்த மண்ணுல இருந்து தோண்டி எடுக்கறதோ பெரும் பாடா இருக்கு.'

''அதுக்கு நான் என்னப்பா பண்ணணும்?''

''தங்கம் செய்யத் தெரிஞ்ச நீங்க, அந்த ரகசியத்தை இப்படியா உங்களுக்குள்ள வெச்சுக்குவீங்க...''

''இப்ப என்ன, உனக்கு அந்த ரகசியம் தெரியணுமா?''

''தெரியணுமாவா... சாமி முதல்ல சொல்லுங்க. ஒபாமாவுல இருந்து ராஜ பக்கேஷ வரை ஒரு ஆட்டு ஆட்டி, பாரத தேசமா கொக்கான்னு உணர்த்திட்டு மறு வேலை பாக்கறேன். பாவம் சாமி நம்ம மக்கள்! எத்த தின்னா பித்தம் தெளியும்னு தெரியாம கிடக்கறாங்க...''

''அப்படின்னா ரசவாதம் முதல்ல உனக்குள்ள நடக்கணுமே?''

''எனக்குள்ளன்னா...?''

''தங்கம் எப்படிப்பட்டது?''

''எதாலும் கறுக்காது. தீக்குள்ள போட்டாலும் ஜொலிக்கும்; மொத்தத்துல எப்பவும் எங்கேயும் தன்னிலையைக் கொஞ்சமும் இழக்காது.''

''நீயும் அப்படி மாறணும்.. யார் என்ன சொன்னாலும், உனக்குள்ள நீ குழந்தையா இருந்தப்ப இருந்த அந்த சந்தோஷம் - அப்படியே இருக்கணும். உன்னைச் சுத்தி எது நடந்தாலும் அது உன்னைப் பாதிக்கக்கூடாது..''

''நீங்க சொல்றதை, கேட்கறதுக்கு நல்லா இருக்கு. ஆனால் இந்த உலகத்துல அந்த மாதிரி இருக்க முடியுமா சாமி?''

''ஏன்... இங்க நான் அப்படித்தானே இருக்கேன்?''

''இங்க இந்தச் செடிகொடி மரம் மட்டைக்கு நடுவுல வாழறது ஒரு வாழ்க்கையா சாமி? இங்க உங்களால எப்படி இருக்க முடியுது?''

''என்னப்பா பண்ண... இங்கதான் உலகத்தோட பாதிப்புகள் எதுவுமின்றி சந்தோஷமா இருக்க முடியுது... இருந்தும் உன்னைப் போல சிலர் எப்படியோ வந்துட்றாங்க!''

''எனக்கும் இந்த மலை ரொம்பப் பிடிச்சிருக்கு... ஆனால், இங்க நான் எவ்வளவு சந்தோஷமா இருந்தாலும், என்ன புண்ணியம்? அதை ஊர் உலகம் பார்க்கறதுலதானே சாமி சந்தோஷமே இருக்கு?''

**"விடமாட்டேன் சாமி... நான் உங்களை உலகத்துக்கே கடவுளாக்கப்போறேன்"**

''அப்ப சரி... அந்த ஊர் உலகத்துலையே நீ இரு. முதல்ல, உன்னை நீ தங்கமாக்கிக்கோ. அப்புறம் ரகசியத்தை நீ என்கிட்ட வந்து கேட்டா சொல்றேன்...''

''அப்ப, நீங்களே என்னை ரசவாதத்தால தங்கமாக்கிடுங்க. உங்க கருத்துப்படியே என்னைச் சுத்தி என்ன நடந்தாலும் என்னை எதுவும் பாதிக்கக்கூடாது. நான் எப்பவும் சந்தோஷமா சிரிச்சுக்கிட்டே இருக்கணும்.''

''அப்படியே ஆகட்டும் அப்பா.. அப்படியே ஆகட்டும்...''

''சரி, நான் எப்ப வந்தா அந்த தங்கம் பண்ற ரகசியத்தை சொல்வீங்க?''

''நீ இப்ப போய் நித்ய சந்தோஷத்துல விழுந்த பிறகு, எப்ப வந்தாலும் உனக்கு

நான் சொல்றேன். அது என்ன ஒரு விஷயம்? மண்ணுக்குள்ள கிடக்கற வேறு விதமான உலோக மண்ணுதானே அது!''

''சரி சாமி, என்னை நீங்க ரசவாதத்தால எப்படி தங்கமாக்குவீங்க! முதல்ல அதைப் பண்ணுங்க...''

''அதை நான் பண்ணணும்ங்கற அவசியமே இல்ல. என்னை நீ இங்க பாத்தேன்னு கீழ போய்ச் சொல். அதைக் கேக்கறவங்களே உன்னை தங்கமாக்கிடுவாங்க...''

''நிஜமாவா?''

''ஆன பிறகு உனக்கே தெரியும். ஆனா நீதான் தெரிஞ்சுக்கவே விரும்ப மாட்டே...''



"சாமி நீங்க சொன்ன மாதிரியே நான் இப்ப தங்கமாயிட்டேன். கண்ணை மூடினாலே நான் ஜொலிக்கறது நல்லாத் தெரியுது."

''அது எப்படி சாமி?''

''நீ முதல்ல கீழ போ... நடக்க நடக்கத் தானா புரியும்..''

''உத்தரவு சாமி... நான் கீழ போய் தங்கமான பிறகு வரேன். அந்த ரகசியத்தை சொல்ல மாட்டேன்னு மட்டும் சொல்லிடாதீங்க...''

''சித்தன்வாக்கு சிவ வாக்குப்பா... அது எப்பவும் மாறாது''

''இது போதும் எனக்கு, வரேன்...''

-குமார் துள்ளிக் கொண்டு திரும்பினான்!

**சி**ல வாரங்களுக்குப் பிறகு...

திருநெல்வேலி மனநலக் காப்பகத்தில் குமார் அனுமதிக்கப்பட்டான். அவன் அப்பா டாக்டரிடம் நடந்ததை கூறத் தொடங்கினார்.

'என் மகன் குற்றாலத்துக்கு குளிக்கப் போயிருக்கான். போன இடத்துல என்ன நடந்துதுன்னு தெரியலை. குற்றால மலைக்கு மேல யாரோ ஒரு சித்தரை தரிசனம் பண்றதுக்காக போயிருக்கான். அவரை தரிசனம் பண்ணவே முடியாதாம். அதுக்கு ஏதோ மந்திரம் இருக்காம். இவனுக்கு அது எப்படித் தெரிஞ்சதுன்னுல்லாம் தெரியலை. ஆனால், இவன் அந்த சித்தரை தரிசனம் பண்ணிட்டான்னு தெரியுது. பாருங்க அவன் சிரிச்சுக்கிட்டே பேசறதை...'' அவர் கூற டாக்டரும் கவனித்தார்.

''சாமி, உங்க தரிசனம் பெரிய பாக்கியம் சாமி... நீங்க சொன்ன மாதிரியே நான் இப்ப தங்கமாயிட்டேன். கண்ணை மூடினாலே நான் ஜொலிக்கறது நல்லாத் தெரியுது. எங்கிட்ட உங்களைப் பத்திச் சிலர் கேட்டாங்க. நான் சொல்ல மாட்டேன்னு சொன்னேன். போட்டு அடி அடின்னு அடிச்சாங்க. நான் கடைசி வரை சொல்லலை சாமி. இனியும் சொல்ல மாட்டேனே...''

- குமார் தனக்குத்தானே பேசிக் கொண்டிருந்தான். டாக்டரிடம் ஒரு பெருமூச்சு.

''என்ன டாக்டர்...?''

''இல்லை. இவர் இப்ப நமக்கெல்லாம் கிடைக்காத சந்தோஷத்துல இருக்கார். ஆனால், நாம் இவரைப் பைத்தியம்னு சொல்வோம். இவர் இப்படியே இருந்துட்டுப் போகவும் விட மாட்டோம். குணப்படுத்தி நம்மளைப் போலக் கஷ்டம் கவலைன்னு ஆக்கினாத்தானே நமக்கு நிம்மதி? அதை நினைச்சேன் சிரிச்சேன்'' என்றார்.

''ஆக்கிடுங்க சாமி...'' என்றார் அப்பா. ஒப்புக்கொண்டு சிரித்தார் டாக்டர்.

என்ன மனிதர்கள்? ●

# வாசகர் போட்டி!

ஏகப்பட்ட கணிப்புகள் உங்ககிட்ட இருக்கா?
அப்ப நீங்கதான் கரெக்ட் சாய்ஸ்... சொல்லுங்க...

**2010 ஐ.பி.எல் -லின்**

## ஸ்டார் ஆஃப் தி சீரீஸ் யார்?

உங்கள் தேர்வை, உரிய காரணத்துடன், போஸ்ட் கார்டில் எழுதுங்கள். சிறந்த பத்து காரணங்களுக்கு ஓஷன் பெட் வழங்கும் சி.எஸ்.கே. டீ-ஷர்ட் பரிசு!

எழுதி அனுப்ப வேண்டிய முகவரி

**ஸ்டார் ஆஃப் தி சீரீஸ்**
கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காட்டுதாங்கல், சென்னை-32.

**கடைசித் தேதி: 01.05.2010**

**ஆசிரியர் தீர்ப்பே இறுதி!**

**அனுபவத்தைக் கலக்காமல் கற்பனையை மட்டுமே கடன் வாங்கி ஒரு எழுத்தாளன் எவ்வளவு காலம்தான் எழுத முடியும்? ஆயிரத்துக்கும் மேற்பட்ட கதைகளை எழுதிக் குவித்திருக்கும் க்ரைம் மன்னன் ராஜேஷ்குமாரின் வாழ்விலும், எழுத்திலும் எத்தனை சதவிகிதம் 'திக் திக்'கும் அமானுஷ்யமும் கலந்திருக்கும் என்பதை அறியும்பொருட்டே, கோவையில் அவரது இல்லத்தில் சந்தித்தோம். அந்த உரையாடலிலிருந்து...**

# எனது அறையில் ஆவியின் குரல்...

**உங்க கதைகளின் மூலை முடுக்கு, இண்டு இடுக்குகளிலெல்லாம் கொலை, குத்து, இரத்தம், திகில் நிரம்பி வழிகிறதே...! இதெல்லாம் நீங்க சர்வசாதாரணமாப் பார்த்த விஷயங்களா?**

''அட! சும்மா எதையாவது கேட்டுப் பயமுறுத்தாதீங்க... நேர்ல ஒரு சொட்டு இரத்தத்தைப் பார்த்தாலும் நான் பதற்றமாயிடுவேன். குழந்தைங்க பென்சில் சீவும் போது பிளேடால் கீறிட்டால் கூட, நான் அதைப் பார்க்காம அந்த இடத்தை விட்டுப் போயிடச் சொல்லுவேன். அந்த பயில்வான் வேலையெல்லாம் எழுத்தோட சரி.''

**அமானுஷ்யங்களை நீங்க நம்புறீங்களா? ஆம் எனில் நீங்க எதிர்கொண்ட ஒரு அனுபவம்...**

''1980-களில் துணி வியாபாரம் சம்பந்தமாக மும்பை போவேன். தமிழ்நாட்டுக்காரர்கள் பெரும்பாலும் ரவிவார்பேட்டிலுள்ள லாட்ஜில் செலவைக் குறைக்கச் சிலரோடு சேர்ந்து தங்குவார்கள். நான் ஒருமுறை, திருப்பூர் தமிழர் ஒருவரோடு சேர்ந்து தங்கினேன். நடுஇரவில், திடீரென இளம்பெண் குரல்... பேச்சு, கலகலன்னு சிரிப்புச் சத்தம்! நான் எழுந்து ஜன்னலை, கதவைத் திறந்தேன். உடம்பு குப்புன்னு வியர்த்து இதயம் படபடக்க ஆரம்பிச்சது. திரும்பவும் படுத்தா அதே சிரிப்பு. ஒருக்களித்துப் படுத்திருக்கும் திருப்பூர்க்காரரை எழுப்ப, அவரை உலுக்கினா, அந்த மனுஷன்தான் தூக்கத்தில தன்னை மறந்து பேசுறார். ஆனால் பெண் குரலில். அறையை விட்டு ஓடி வந்துட்டேன். காலையில் அவரு, ''தம்பி! ஸாரிப்பா, ராத்திரி பயந்துட்டீங்களா? ராத்திரி ஏதாவது பேசியிருந்தா மன்னிச்சுடுங்க! அது நானில்லை. நைட்டு சினிமா பார்த்துட்டு (சின்ன வயசுல) புளிய மரத்து வழியா வீடு திரும்பும் போது, என் மேல பொத்துன்னு ஏதோ விழுந்தா மாதிரி இருந்தது.

அப்னிலேர்ந்து இப்படித் தான். வைத்தியம் முதல் மாந்திரீகம் வரை பார்த்துட்டேன். நோ யூஸ். நானும் அமானுஷ்யத்தோட வாழப் பழகிட்டேன்' என்றார்.

இன்னுமொரு சம்பவம்: சேலத்துக்கு நைலான் மேட்ஸ் சப்ளை செய்ய அங்குள்ள ஒரு கிராமத்துக்குப் போனேன். அன்று இரவு பதினொரு மணி. பௌர்ணமி வேறு. மில்லில் சங்கு ஒலிக்க ஆரம்பிச்சதும்தான் தாமதம்; நாலு ரோடு சந்திப்பில் எங்கெங்கிருந்தோ சுமார் ஐம்பது நாய்கள் (எப்படித்தான் வந்ததோ?) அந்த எடத்தாண்ட கூடி நிலாவைப் பார்த்து ஊளையிட ஆரம்பித்தன. பயமும், பதற்றமும் திக்திக்கும் சேர்ந்த அசல் காட்சி. அக்கம் பக்கம் விசாரிச்சேன். அந்த இடத்தில எப்பவோ ஒருத்தனை வெட்டிக் கொன்னுருக்காங்க. அதுலேர்ந்து, பௌர்ணமியில மட்டும் இப்படி நடக்குதுன்னு சொன்னாங்க. அதுதான் 'ஒரு சனிக்கிழமை இரவு' என்ற நாவலா மாறிச்சு.



## ராஜேஷ்குமார் பேட்டி

**ஜோசியம், பில்லிசூன்யம், ஆவி நம்பிக்கையுண்டா?**

ஆவி, கைரேகை/சோழி/கிளி ஜோசியம் இதெல்லாம் நான் நம்புவதில்லை. சூன்யம் வெக்கிறதை தொழிலாச் செய்தவங்க மோசமான முறையில துன்பப்பட்டு இறந்ததைப் பார்த்திருக்கேன். எனக்கு கோள்களின் அமைப்பு, கிரகங்களின் சுழற்சி, அது மனித வாழ்வைப் பாதிப்பது போன்ற துல்லியமான ஜோசியத்தை நம்புறேன். இது வெறும் நம்பிக்கையில்லை. விஞ்ஞானமும் கூட. வாழ்வின் ரகசியங்களில் அமானுஷ்யமும் ஒன்று. அதை மட்டும் நாம் எப்படி நிராகரிக்க முடியும்...'' என்று சொல்லி ஹா... ஹா... எனச் சிரித்தார் க்ரைம் மன்னன்.

'அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்' என்கிற மாதிரி, இப்போ யார் உரக்கச் சிரிச்சாலும், கலவரம் ஆயிடுதுங்க என்று சலாம் போட்டு ஜகா வாங்கிட்டோம்.

சந்திப்பு: **ஆர்.பாலா**

# என்னை முத்தமிட்ட பாம்பு!

"அப்போது தமிழ்ப்பட உலகின் முன்னணி நட்சத்திரமாக இருந்தேன். 1974-ஆம் ஆண்டு. ஒருநாள் சின்னப்பா தேவரிடமிருந்து ஃபோன் வந்தது. போய்ப் பார்த்தேன். 'ஒரு நல்ல கதை இருக்கும்மா. பாம்பு சப்ஜெக்ட். அதுல நீதான் நடிக்கணும். நீ புகழோட உச்சிக்குப் போயிடுவே! படத்தில நீ பாம்புக்காக வெள்ளிக்கிழமை விரதம் இருக்கிற பொண்ணு. உன் புருஷனுக்கு பாம்பைக் கண்டாலே துளியும் பிடிக்காது'' என்று படத்தோட கதையை, உணர்ச்சிபொங்க அவர் சொன்னபோது, நான் ரொம்ப இம்ப்ரஸ் ஆயிட்டேன். ஆனாலும், பாம்பு கூட நடிக்கணும்னு சொன்ன



போது, உள்ளுக்குள்ளே உதறலாகவே இருந்தது.

ஷூட்டிங் ஆரம்பித்து மற்ற காட்சி களை எடுத்துக் கொண்டிருந்தபோது, நோ பிராப்ளம். ஒருநாள், ''நாளைக்கு பாம்பு சீன் எடுக்கறோம்'' என்றபோது, மீண்டும் மனசு திக் திக் என்று அடித்துக் கொள்ள ஆரம்பித்தது. ராத்திரி படுத்தபோது தூக்கம் கூட வரவில்லை.

வாஹினி ஸ்டுடியோவில் ஆறாவது ஃப்ளோர். எல்லோருமே கொஞ்சம் பரபரப்பாக இருந்ததைக் கவனித்தேன். பாம்பு டிரெயினர் கூடையோடு ரெடியாக இருந்தார்.

கதைப்படி, நான் வணங்குகிற பாம்பு செத்துவிட்டதாக நினைத்து மயக்கம் போட்டு விழுந்த என்னைக் கட்டிலில் படுக்க வைத்திருப்பார்கள். ஆனால், தப்பிப் பிழைத்த பாம்பு என்னைத் தேடிக் கொண்டு அந்த அறைக்கு வரும். இதில் சிக்கல் என்னவென்றால், நான் மயக்கத்தில் இருப்பதாகக் காட்சி. எனவே, என் மீது பாம்பு ஊர்ந்து வரும் போதும் சரி, முகத்துக்கு எதிரே மார்பில் படமெடுத்து தலையை உயர்த்தும்போதும் சரி, கிளைமாக்ஸாகத் தன் நாக்கால் என் உதட்டில் முத்தமிடும் போதும் சரி; நான் கொஞ்சமும் அசையக் கூடாது. கண் சிமிட்டி விடக் கூடாது; எல்லாவற்றுக்கும் மேலாக, முகத்தில் பயம் அணு அளவும் தெரியக்கூடாது!

இரண்டு கேமராக்கள் தயாராக இருந்தன. அங்காளபரமேஸ்வரியை மனதார வேண்டிக் கொண்டு, கட்டிலில் படுத்துக் கொண்டேன். பாம்பு டிரெயினர் மஸ்தான் பாம்பைக் கூடையிலிருந்து வெளியே எடுத்துவிட, அந்த பாம்பு எந்தப் பக்கமும் போகலாம்; ஆனால் அது சொல்லிக் கொடுத்தாற்போல, நேராகக் கட்டிலில் ஏறி, என் பாதங்களின் பக்கமாக வந்து, அப்படியே என் முகத்தை நோக்கி ஊர்ந்து வந்து

'படக் படக்'
விடிப்பு!

கொண்டிருப்பதை என்னால் நன்றாக உணர முடிந்தது. ஆனால் காட்சிப்படி நான் மயக்கத்தில் இருக்கிறேனே; அப்படியே சவம் போலக் கிடந்தேன்!

முகத்துக்கு எதிரே படமெடுத்த நிலையில் புஸ்... புஸ் என்ற மூச்சு சப்தம் கேட்டு, இலேசாகக் கண் விழிக்க வேண்டும்; எதிரே படமெடுக்கும் பாம்பைப் பார்த்து 'ஐயோ' என அலறிவிடக் கூடாது. முகத் தில் துளி பயமுமின்றி ''அம்மா! உனக்கு ஒண்ணும் ஆகலியே!'' என்று சந்தோஷ டயலாக் பேச வேண்டும். உள்ளே ஹார்ட் வேகமாக படக் தடக் எனக் குதிக்க, இலேசா உடம்பு வியர்த்துக் கொட்ட, மார்பின் மீது இருக்கும் பாம்பைப் பார்த்துச் சொன்னபடியே வசனம் பேசி நடித்தேன். அடுத்து மஸ்தான் உத்தரவுப்படி பாம்பு தலையைத் தாழ்த்தி, என் உதடுகளில் தன் நாக்கால் முத்தம் கொடுக்க, டைரக்டர் 'கட்' சொன்னார். மஸ்தான் பாம்பை எடுத்து, கூடைக்குள் போட, நான் எழுந்து கொண்டேன். இந்த 'திக் திக்' ஷாட்டுக்குப் பிறகு, படத்தின் மத்த பாம்பு சீன்கள் எல்லாம் ஜுஜுபி!

வெள்ளிக்கிழமை விரதம் படம் ரிலீஸான போது, ரகசியமாக வெலிங்டன் தியேட்டருக்குப் போய், ரசிகர்களோடு உட்கார்ந்து படம் பார்த்தேன். பாம்பு முத்தம் கொடுக்கும் சீனில், தியேட்டரில் பின் ட்ராப் சைலன்ஸ். அந்த சீன் முடிந்ததும் பார்க்க வேண்டுமே! அப்பப்பா! என்ன கைத்தட்டல்! விசில்! கூக்குரல்கள்! அவையெல்லாம் அந்த 'திக்' தருணங்களின் பரிசு.

சந்திப்பு : **எஸ்.சந்திரமௌலி**

படம் : **ஸ்ரீஹரி**



# வாமனதேசங்கள்

# 15

ஜி.எஸ்.எஸ்.

தென்கிழக்கு ஐரோப்பாவில் உள்ளது மாசிடோனியா. நாலாபுறமும் நாடுகள். வடக்கே செர்பியா, கிழக்கே பல்கேரியா, தெற்கில் கிரீஸ், மேற்கில் அல்பேனியா. "உன் பெயரை மாற்றிக் கொள்" என்கிறது கிரீஸ். மாட்டேன் என்கிறது மாசிடோனியா.

கோபமடைந்துள்ள கிரீஸ், நேட்டோ அமைப்பில் மாசிடோனியாவைச் சேர விடாமல் செய்துவருகிறது. (பெல்ஜியத்தில் உள்ள ப்ருஸல்ஸ் நகரைத் தலைமையகமாகக் கொண்டு இயங்குகிறது நேட்டோ. அதாவது வட அட்லான்டிக் ஒப்பந்த அமைப்பு (North Atlantic Treaty Organisation). வட அமெரிக்கா மற்றும் ஐரோப்பாவைச் சேர்ந்த இருபத்தி ஆறு நாடுகள் இந்த அமைப்பில் உறுப்பினர்களாக உள்ளன. இந்த அமைப்பின் முக்கிய நோக்கம், 4.4.1949 அன்று கையெழுத்திடப்பட்ட நேட்டோ ஒப்பந்தத்தை மதிப்பதுதான். அதாவது, உறுப்பினர் நாடுகளில் ஒன்று பிற சக்திகளால் தாக்கப்பட்டாலும், மற்ற அனைத்து உறுப்பினர் நாடுகளும் சேர்ந்து பிறசக்திகளைப் பதிலுக்குத் தாக்கி உறுப்பினர் நாட்டைக் காப்பாற்ற வேண்டும்.

பெயர்க் காரணத்தை விட்டுவிட்டால் இந்த இரு நாடுகளும் சிநேக நாடுகள்தாம்! இரண்டு நாடுகளுக்கும் இடையே ஏற்றுமதி இறக்குமதி உண்டு. (மாசிடோனியாவின் வெளிநாட்டு முதலீடுகளில் 57% கிரீஸிலிருந்துதான்). முதலீடுகளுக்கும் குறைவில்லை. கலாசாரப் பரிமாற்றத்துக்கும் எந்தத் தடையும் இல்லை. ராணுவ ஒத்துழைப்பு கூட உண்டு.

தவிர, உலக அரங்கில் அமைதியை விரும்பும் நாடுகளாகத்தான் இரண்டுமே தங்களைக் காட்டிக் கொள்ள விரும்புகின்றன. ஒலிம்பிக்ஸின் தாயகமான கிரீஸுக்கு, 'உலகையே இணைக்கும்

# என் பெயரை மாற்ற மாட்டேன்!

– இப்படிக்கு,

## மாசிடோனியா



● அலெக்ஸாண்டர்

போரின்போது, மூன்று லட்சத்திற்கும் அதிகமான அல்பேனிய அகதிகள் 1999-ல் தங்கள் சின்ன நாட்டில் குடி புகுந்தபோது மட்டும் மாசிடோனியா திணறிப்போனது. (நல்லவேளையாக, போருக்குப் பிறகு அகதிகள் தங்கள் நாட்டுக்கே திரும்பிச் சென்று விட்டனர்)

இப்படியிருக்க, ஏன் மாசிடோனியாவுக்கும் கிரீஸுக்குமிடையே பொருமல்? மாசிடோனியா அல்லது மாசிடோனியக் குடியரசு என்று அந்த நாடு தன் பெயரை வைத்துக் கொள்வதில், கிரீஸுக்கு என்ன சிக்கல்? காரணம் இதுதான்.

கிரீஸ் நாட்டின் ஓர் எல்லை மாகாணமாக மாசிடோனியா என்ற பகுதி இருக்கிறது. அதே பெயருடன் உள்ள மாசிடோனியா, தன் பெயரையே ஓர் ஆதாரமாகக் கொண்டு, தனது நாட்டிலுள்ள அதே பெயர் கொண்ட மாகாணத்தையும் சொந்தம் கொண்டாடக் கூடும் என்கிற அச்சம் கிரீஸுக்கு.

கொலம்பியா என்ற பெயரில் ஒரு (கலவர) நாடு இருக்கிறது. அமெரிக்காவிலும் கொலம்பியா என்ற மாகாணம் உண்டு (வாஷிங்டன் இதில்தான் இருக்கிறது).

அவ்வளவு ஏன்? யு.எஸ். தேசத்தை

அமைதித் தூதன் நாம்' என்கிற பெருமை உண்டு. ஒலிம்பிக்ஸ் நடைபெறும் இடத்துக்குத் தனது ஜோதியை கிரீஸ் அனுப்பும்போது, ஒவ்வொரு முறையும் இப்படிப் பெருமைப்படும்.

மாசிடோனியாவும் தனது வெள்ளைக் கொடி விருப்பத்தை அழுத்தமாகவே பதிவு செய்ததுண்டு. போஸ்னியா, செர்பியா போன்ற யுகோஸ்லாவியாவின் பிற குடியரசுகள், ரத்த ஆற்றில் மிதந்தபடி தனிநாடுகள் ஆக, ஒரு துப்பாக்கிக் குண்டுகூட ஒலிக்காமல் அமைதியாகத் தன்னை விடுவித்துக் கொண்டது மாசிடோனியா. கொசோவா



'அமெரிக்கா' என்றுதான் அழைக்கிறோம். இதற்காக கனடாவோ, மெக்சிகோவோ ''நாங்கள் மட்டும் அமெரிக்காவில் இல்லாமல் ஆஸ்திரேலியாவிலா இருக்கிறோம்? அதனால் இனி யு.எஸ்.ஸை 'நடு அமெரிக்கா' என்றுதான் குறிப்பிட வேண்டும்'' என்றால் எப்படியிருக்கும்?

ஆனால், இந்த வாதங்களெல்லாம் கிரீஸின் காதுகளில் விழவேண்டுமே!

இந்த இரு நாடுகளும் ஏற்கனவே மோதிய வேறொரு சம்பவமும் உண்டு. 1992-லிருந்து 1995-வரை கொடி தொடர்பாக ஒரு பிரச்னை எழுந்தது. தனது புதிய கொடியில் ''வெர்ஜினா சூரியன்'' (Vergina Sun) இருக்குமாறு பார்த்துக்கொண்டது மாசிடோனியா. அதாவது சூரிய உருவத்தில் 14 கதிர்கள் இருக்கும்.

''அதெப்படி? எங்கள் வட பகுதியான வெர்ஜினாவில் தொல்பொருள் ஆய்வு செய்தபோது கிடைத்த கல்வெட்டில்தானே இந்தச் சூரியன் உருவம் இருந்தது? இதை உங்கள் கொடியில் சேர்த்துக்கொண்டது எங்களைச் சீண்டிப் பார்க்கும் எண்ணத்தில்தான்'' என்று சிலிர்த்தது கிரீஸ்.

பிறகு ஒரு வழியாகத் தன் கொடியை மாற்ற மாசிடோனியா சம்மதித்தது.

மற்றொரு விவரமும் விவகாரமானது. மாசிடோனியாவின் தலைநகரம் ஸ்கோப்ஜெ (SKOPJE). சில ஆண்டுகளுக்கு முன், அதன் விமான நிலையத்துக்கு அலெக்ஸாண்டரின் பெயர் வைக்கப்பட்டது. இதையும் கிரீஸ் கடுமையாக எதிர்த்தது. காரணம் அலெக்ஸாண்டரைத் தனது மண்ணின் மைந்தன் என்று உரிமை கொண்டாடுகிறது கிரீஸ். தவிர தத்துவ அறிஞர் அரிஸ்டாட்டிலையும் தனது மண்ணின் மைந்தன் என்கிறது.

(கிரேக்க வீரர் என்று அலெக்ஸாண்டர் கருதப்பட்டாலும், அவரது இனம் கிரேக்க இனமே தவிர, சொந்த நாடு மாசிடோனியாதான். அந்தக் கால மாசிடோனியாவின் தலைநகரான பெல்லாவில் பிறந்தவர் அலெக்ஸாண்டர். அந்த நாட்டு மன்னன் இரண்டாம் ஃபிலிப்பின் மகன். அலெக்ஸாண்டரின் புத்திக் கூர்மையை மேலும் தீட்ட, அவருக்குக் குருவாக அமர்த்தப்பட்டவர்தான் தத்துவஞானி அரிஸ்டாட்டில். அப்போது கிரீஸ் என்ற நாடு (இப்போது உள்ளதைப்போல) கிடையாது. இப்போதைய கிரீஸ் பகுதியில் உள்ள பல ராஜாங்கங்களும் மாசிடோனியாவின் உயர்வை

ஏற்றுக்கொண்டிருந்தன. ஆனால் தனது இருபத்து ஒன்றாவது வயதில் அலெக் ஸாண்டர் பட்டம் சூட்டிக்கொண்ட போது, ''இந்தச் சின்னப் பையனுக்கு நாம் அடி பணிய வேண்டுமா?'' என்று ஏதென்ஸ், தேபெஸ் போன்ற கிரேக்க நாடுகள் தயங் கின (நாளடைவில் கிரேக்கத்தையும் தாண்டி பஞ்சாப் வரைக்கும் வந்து, அந்தக் காலத்திய உலகத்தில் கிட் டத்தட்ட முக்கால்



வாசியைத் தனது குடைக்குள் அலெக் ஸாண்டர் கொண்டு வந்தது வேறு விஷ யம்). ''மாசிடோன் பகுதியின் கிரேக்க சக்ர வர்த்தி'' என்று அலெக்ஸாண்டரை அழைப் பதில் கிரேக்கம், மாசிடோனியா ஆகிய இரண்டுமே அந்த காலத்தில் பெருமை கொண்டிருந்தன).

கிரீஸில் இது தொடர்பான எண்ணங்கள் தீவிரம் பெற, 1992-ல் மாசிடோனியா மீது போர் தொடுக்கலாமா என்று கூட கிரீஸ் கருதியது. சமாதானத்துக்கு முயன்ற கிரீஸ் பிரதமர் கோஸ்டாஸ் மிகட்ஸொ டாகிஸ் வெளியேற்றப்பட்டார். அடுத்து வந்த ஆண்ட்ரியாஸ், மாசிடோனியாவுடன் உள்ள பொருளாதாரத் தொடர்பைத் துண் டித்தார். இதனால், கிரீஸ் நாட்டிலுள்ள பல வணிகர்கள் பாதிக்கப்படவே எதிர்ப்பு எழுந்தது. 1995-ல் சமாதான ஒப்பந்தம் ஒன்று கையெழுத்திடப்பட்டது.

''கிரீஸ் இன்னமும் சிறுபான்மையி னரின் உரிமைகளைப் புரிந்து கொள்ள வில்லை. ஒரு நாடு, ஓர் இனம் என்றே நினைக்கிறது. ஆனால் கிரீஸில் துருக் கியர்கள், அல்பேனியர்கள், மாசி டோனியர்கள் ஆகியோரும் சிறுபான்மை யினராக இருக்கிறார்கள். நாளடைவில் நாங்கள் அவர்களை உரிமை வேண்டி தூண்டி விடுவோம் என்கிற பயம் தேவை யற்றது'' என்கிறார் மாஸிடோனிய வெளி நாட்டு அமைச்சர் அன்டோனியோ மிலோ சோஸ்கி.

'**மா**சிடோனியக் குடியரசு (ஸ்கோப்ஜ்)' என்று வேண்டுமானால் தன் பெயரை அந்த நாடு வைத்துக் கொள்ள லாம் என்கிறது ஐ.நா. சபை. இதற்கு மாசி டோனியா சம்மதித்தாலும் கிரீஸ் ஒத்துக் கொள்ளவில்லை.

## "அலெக்ஸாண்டரைத் தனது மண்ணின் மைந்தன் என்று உரிமை கொண்டாடுகிறது கிரீஸ்."

மாசிடோனியாவின் தற்போதைய கவலை இதுதான். ஐரோப்பிய யூனியனில் சேரும் முயற்சிகளில் ஈடுபட நினைக்கிறது அது. 'நேட்டோ'வில் உறுப்பினராவதற்கே தடுத்துவிட்ட கிரீஸ், இதற்கு மட்டும் சம் மதித்து விடுமா என்ன?

**(அடுத்த இதழில் - மூன்று மதங்களின் முக்கோணப் பிடியில் சிக்கிய நாடு)**

● கொல்லி மலைச் சாரலில், பாக்ஸைட் கனிமம் அதிக அளவில் கிடைக்கிறது. அலுமினியத் தயாரிப்பில், பாக்ஸைட் முக்கியமான தேவை. பெய்யும் மழையை பூமிக்குள் தேக்கி வைக்கவும் அது உதவுகிறதாம். கோடைக்காலத்தில் மலைச்சரிவுகளில் கசியும், ஊற்றுகளுக்கும் அருவிகளுக்கும் பாக்ஸைட்டும் ஒரு காரணமாம். அப்படிப்பட்ட பாக்ஸைட்டைக் கடந்த பத்தாண்டுகளாக ஒரு நிறுவனம்



# மலையை மொட்டையடித்த மத்திய அமைச்சர்!

?

வெட்டி எடுத்து வந்தது. கொல்லிமலைத் தொடரில் இரண்டு மலைகளை இந்த நிறுவனம் மொட்டையாக்கிவிட்டது. சுற்றுச்சூழல் ஆர்வலர்கள் நீதிமன்றம் செல்ல, ''அந்த நிறுவனம் முறைப்படி அனுமதி பெறாமல் பாக்ஸைட் எடுத்திருக்கிறது'' என்ற பகீர்த் தகவல் வெளியானது. 'இதைவிட அதிர்ச்சி என்னவென்றால், அந்த நிறுவனத்தில் இயக்குனராக இருந்த ஒருவர், இப்போது மத்திய அமைச்சராகவும் இருக்கிறார்' என்கிறார் உயர்நீதிமன்ற ஸீனியர் வழக்கறிஞர் ஒருவர்.

● உயர்நீதிமன்றத்தில் வழக்கறிஞர் - காவல்துறை மோதல் விசாரணை நடந்து வருகிறதல்லவா! உயரதிகாரிகள், குற்றச்சாட்டுகளிலிருந்து தப்ப, பரஸ்பரம் ஒருவர் மீது ஒருவர் குற்றம் சாட்டிப் பிரமாணப் பத்திரம் தாக்கல் செய்து வருகிறார்கள். ''அப்போது ஆணையராக இருந்து, இப்போது கூடுதல் டி.ஜி.பி. ஆக இருக்கும் ராதாகிருஷ்ணனே, வழக்கறிஞர்கள் மீது போலீஸ் தாக்குதலுக்கு காரணம் என்றும், அவரைக் காப்பாற்ற முயற்சி செய்கிறார்கள்'' என்றும், அப்போதய கூடுதல் ஆணையராக இருந்த விஸ்வநாதன் சொல்லியிருக்கிறார். இவர் மு.க. அழகிரிக்கு மிகவும் வேண்டியவராம். காவல்துறை அதிகாரிகளான ராதாகிருஷ்ணனுக்கும் விஸ்வநாதனுக்கும் இடையேயுள்ள இந்த மோதலுக்குக் காரணம் இருவருக்கும் பின்னணியில் அழகிரியும் ஸ்டாலினும் துணையாக இருக்கிறார்கள் என்ற தைரியம்தானோ? என்கிறார் ஓர் அதிகாரி.

– சஞ்சயன்




# பயம்!

பயம் என்றால் என்ன? 'நமக்கு என்ன ஆயிடுமோ? ஏதாயிடுமோ?' என்று நிம்மதியில்லாமல் தவிப்பதுதான் பயம். 'நம்மை எதுவும் என்னவும் பண்ண முடியாது; அசைக்க முடியாது,' என்று ஸ்திரமாக ஒரு ஸ்தானத்தில், நம்மை அமர்த்திக் கொள்கிறவரையில் பயம் இருந்துகொண்டே இருக்கும். அப்படி ஜீவனை ஆட்டமில்லாத நிம்மதியான ஒரு ஸ்தானத்தில் சாஸ்வதமாக இருக்கச் செய்வதுதான் மோட்சநிலை என்பது. நமக்கு அந்நியமாக எதுவோ ஒன்று இருக்கிறவரைக்கும், 'அது நம்மை என்ன பண்ணிவிடுமோ? நாம் நிம்மதியின் ஸௌக்கியத்திலேயே ஸ்திரமாக இருக்க முடியாதபடி, அதனிடமிருந்து என்ன கெடுதல் வருமோ?' என்ற எண்ணம், அதாவது பயம், இருந்துகொண்டேதான் இருக்கும்.

'நாம் ஒன்று; நமக்கு இரண்டாவதாக இன்னொரு அந்நிய வஸ்து, அநேக அந்நிய வஸ்துக்கள் உள்ளன' என்ற வேறுபாட்டுக்குத்தான் 'த்வைதம்' என்று பெயர்.'த்வி' (dvi) என்றால் இரண்டு, 'Two' என்பது அதிலிருந்து வந்ததுதான். உச்சரிப்பு 'டூ' என்று இருப்பதால், இந்த ஸம்பந்தம் பளிச்சென்று புரியாமலிருக்கலாம்; ஸ்பெல்லிங்கைப் பார்த்தால் புரிந்துவிடும். 'T-W-O என்பது D-V-I ஸம்பந்தமுடையதாகத் தெரிகிறதல்லவா?

த்வைதமிருந்தால், அப்போது ஒன்றுக்குத் தன்னைவிட வேறாக உள்ள இன்னொன்றால் பயம் ஏற்பட இடமுண்டு. எப்போது த்வைதம் போய், தனக்கு வேறாக எதுவுமே இல்லை என்று தெரிந்துகொள்கிறோமோ, வேறில்லாத தானாகிய ஆத்மாவில் ஆணி அடித்தாற்போல் நம்மை ஸ்திரமாக அமர்த்திக் கொள்கிறோமோ, அப்போதுதான் பயம் போகும். இப்படி த்வைதமில்லாமல் ஆவதுதான் அத்வைதம்.

வேதம் சொல்கிற மோட்சம் அந்த அத்வைத அநுபவந்தான் என்று நம்முடைய ஆசார்யாள் ப்ரஹ்ம ஸூத்ரம், உபநிஷத்துக்கள், கீதை ஆகியவற்றுக்குப் பாஷ்யம் செய்து நிலை நாட்டியிருக்கிறார். அத்வைதம்தான் மோட்சம். அது பயமில்லாத அபயநிலை.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

**ஃபை**லைத் தேடு வதைக் கைவிட்டு விட்டு, நாற்காலியில் உட்கார்ந்தாள் மனோகரி. திடீரென்று ரொம்ப அசதியாக உணர்ந் தாள். நினைவுகள் ரயில் வண்டித் தொடர் போல் வேகமாக ஓடின. வீட்டில் காலையில் நடந்த சிறு சச் சரவு ஞாபகத்துக்கு வந்தது. அது ஒன்றும் புதுசில்லை. அடிக்கடி நடப்பதுதான். ஆனாலும், அன்று காலை யில், தான் அப்படிப் பேசி யிருக்க வேண்டாம் என்று மனோகரி நினைத்தாள். தாண்டவன் ஏதோ பேப் பரை மேஜையில் வைத்துவிட்டுப் போனான்.

பெரிய கண்களு டன் கிருஷ்ணபாரதி யின் முகம் அவ ளையே உற்றுப் [illegible]

குரல்கூடக் கேட்பது போலிருந்தது. மனோகரி வழக்கம் போல் சமையலறையில் போராடிக் கொண்டிருந்தாள். மாமா - கிருஷ்ணபாரதியின் அப்பா - முன் ஹாலில் நெற்றியில் திருநீறு அணிந்துகொண்டு தேவாரத்தைப் பாடிக் கொண்டிருந்தார். பாப்பம்மாள் பிள்ளைகளைக் கவனித்துக் கொண்டிருக் கிறாள் என்று பேர். ஆனால், அவள் சொல்லி அந்த வீட்டில்



# உள்ளும் புறமும் 2

வண்ணநிலவன்



யாரும் கேட்கப் போவதில்லை. வருணும், கார்த்திகாவும் புத்தகங்களை அப்படியப்படியே போட்டு விட்டு விளையாடிக் கொண்டிருந்தனர். பாப்பம்மாள் அவர்களைப் படிக்கச் சொல்லாமல், அவர்களையே வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தாள். குழந்தைகள் விளையாடுவது அவளுக்கு ரொம்பவும் பிடித்தமானது. கிருஷ்ணபாரதி காலைத் தினசரிகளில் மூழ்கிக் கிடந்தான்.

அவனுக்கு பேப்பர், புத்தகம், சினிமா இவற்றைவிட்டால் வேறு எதுவுமே தெரியாது. அவற்றைப் பற்றி வாய் ஓயாமல் பேச வேண்டுமென்றால் போதும். சாப்பாடு, தண்ணீர் கூடத் தேவையில்லை அவனுக்கு. நல்ல வேளை சுசீலா வரவில்லை.

சுசீலாவை நினைத்ததும் மனோகரி கோபத்தில் பற்களைக் கடித்துக் கொண்டாள். கவிதை படித்துக் காட்டுகிறேன்; கட்டுரை படித்துக் காட்டுகிறேன் என்று நேரம் காலம் தெரியாமல் வந்து நிற்பாள். நல்லவேளை, இங்கே வராமல் எங்கேயாவது தொலைந்தால் சரி. கல்யாணமாகிக் குழந்தைகுட்டிகளுடன் இருக்கிற ஆணுடன் சரிசமமாக அப்படி என்ன பேச்சும், சிரிப்பும்?

இந்த ஆளுக்காவது புத்தி வேண்டாம்? மனைவியை உட்கார வைத்து, அழைத்துச் செல்ல வேண்டிய பின்சீட்டில், அந்த சுசீலாவையும் ஏற்றிச் செல்கிறாரே? தன்னையும் அறியாமல் மனோகரியின் தலை, 'இல்லை' என்பது போல் இப்படியும் அப்படியும் அசைந்தது. கிருஷ்ணபாரதி மீது ஆத்திரமும் கோபமும் பெருக்கெடுத்தது. பெட்ரூமிலிருந்து வருணும், கார்த்திகாவும் சத்தம் போடுவது கேட்டது. அரைப்பதற்காக எடுத்து வைத்த மிக்ஸி ஜாருடன் ஹாலுக்கு வந்தாள். கிருஷ்ணபாரதியை எரித்து விடுவது போல் பார்த்தாள். அவனோ பேப்பருக்குள் புதைந்து கிடந்தான். அவனருகே, சுசீலா சிரித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பது போலிருந்தது மனோகரிக்கு. அவள் மூக்கிலிருந்து உஷ்ணக் காற்று வெளியேறியது. வேகமாகச் சென்று பேப்பரைப் பிடுங்கி வீசி எறிந்தாள்.

''நான் கிச்சன்லே

கெடந்து சாகணுமா? நீங்க பாட்டுக்குப் பேப்பர் படிச்சுக்கிட்டு... பிள்ளைகள் படிக்காமே சத்தம் போடுறது கூடத் தெரியாமே அப்படி அந்தப் பேப்பர்லே என்னதான் இருக்கு?''

''மனோ, என்னது நிமிர்ன்னு?''

ஹாலில் அவள் போட்ட சப்தத்தைக் கேட்டு வருணும், கார்த்திகாவும் புத்தகங்களை எடுத்துக்கொண்டு உட்கார்ந்தனர். பாப்பம்மாள் மெதுவாகக் கட்டிலிலிருந்து எழுந்து வந்து பார்த்தாள். சண்முகம் எதையும் பாதிக்கப்படாமல், தேவாரத்தை ராகம் போட்டுப் பாடிக் கொண்டிருந்தார்.

''எல்லாரும் ஹாய்யா அவங்க அவங்க பாட்டுக்கு இருக்கீங்க. நான் மட்டும் கிச்சன்லேயே கெடந்து சாகணும்ன்னு என்ன தலைவிதியா? அங்கே ஆபிஸிலேயும் சாக வேண்டியதிருக்கு. இங்கே வீட்டிலேயும் கெடந்து சாக வேண்டியதிருக்கு. அவ ஏதேவ தனியா கெடந்து கஷ்டப்படுறாளே, அவளுக்கு ஏதாவது உதவுவோம்னு யாருக்காகவது இந்த வீட்டிலே அக்கறை இருக்கா?'' ஆத்திரத்தில் வேகத்தில் கைகள் நடுங்கின.

''எதுக்கு இப்படிக் கத்துறே? முடியலைன்னா சமையலுக்கு ஒரு ஆளைப் போட்டுக்கோயேன். நானும் எவ்வளவோ தடவை சொல்லியாச்சு'' என்றான் கிருஷ்ணபாரதி. இந்த நேரம் பார்த்து கவிதா வந்து தொலைத்து விடக் கூடாதே என்று கவலைப்பட்டான். மிக்ஸி ஜாரை அவனருகே சோபாவில் தொப்பென்று வைத்தாள். பெட்ரூமுக்குள் சென்று வருணையும் கார்த்திகாவையும் சத்தம் போட்டாள்.

''ஏன் குழந்தைகளைச் சத்தம் போடுறே?'' என்று பிள்ளைகளுக்குப் பரிந்துபேசினாள் பாப்பம்மாள்.

''நீங்க சும்மா இருங்க. என் பிள்ளைகளை எப்படி வளர்க்



## பூனை கத்தினா சாவு!

அமெரிக்காவின் ரோட் தீவிலுள்ள ஒரு மருத்துவமனையில் வசிக்கும் பூனை இது. பெயர் ஆஸ்கர். வயது இரண்டு.

இன்று சீரியஸாக இருக்கும் நோயாளிகள் இறப்பதற்கு நான்கு மணி நேரத்துக்கு முன்பே, இந்த அதிசயப் பூனைக்குத் தெரிய வருமாம். தெரிந்ததும், அந்த நோயாளியின் அருகில் படுத்துக் கொண்டு முனகும்.

இப்பூனை, நோயாளிகளின் அறைக்குள் நுழைந்தாலேயே, நோயாளிகளெல்லாம் அலற ஆரம்பித்து விடுகிறார்களாம். டாக்டர்களோ, பூனை படுத்தும் ரூம் நோயாளியின் உறவினர்களுக்கெல்லாம் சாவுச் செய்தியைச் சொல்லி அனுப்பி விடுகிறார்களாம்.

இதுவரை இருபத்தைந்து நோயாளிகளின் இறக்கும் நேரத்தைக் கணித்துக் காட்டியுள்ளதாம் இப் பூனை.

இந்த ஆஸ்கரின் சிறப்பை, அம் மருத்துவமனையின் டாக்டர் டோசா, புத்தகமாக இப்போது எழுதியுள்ளார்.

- க.பரமசிவன், மதுரை



## "எதுக்கு மனோ! வீணா மனசைப் போட்டு அலட்டிக்கிறே... எப்பப் பார்த்தாலும் உனக்கு அவ ஞாபகம்தானா?"

எடுத்துக் கணவனுக்கு ஃபோன் செய்தாள்.

"என்ன மனோ கரி?"

"சுசீலாவும் சினிமாவுக்கு வர்றாளா?"

"ஐயோ எதுக்கு மனோ இப்படி வீணா மனசைப் போட்டு அலட்டிக்கிறே... எப்பப் பார்த்தாலும் உனக்கு அவ ஞாபகம் தானா?"

"நீங்க என்னை விட்டுட்டுப் போயிற மாட்டீங்களே?"

"ஏன் மனோ உன் மூளை இப்படியெல்லாம் போகுது? எதுக்கு இப்படி விபரீதமா கற்பனை எல்லாம் பண்றே? எனக்கு ரொம்பச் சங்கடமா இருக்கு மனோ..."

"சத்தியமா சொல்லுங்க."

"இது என்ன சின்னப் பிள்ளை மாதிரி?"

"பார்த்தீங்களா..? சத்தியம்னு உங்க வாயிலே இருந்து வர மாட்டேங்குதே...?"

கிருஷ்ணபாரதிக்குப் பாவமாக இருந்தது. தனக்கும் சுசீலாவுக்கும் தவறான எந்த உறவும் இல்லை என்பதை எப்படி நிரூபிப்பதென்று புரியவில்லை.

"சரி... மனோ... இதையெல்லாம் ஆஃபீஸ்லே வச்சுப் பேசணுமா? வீட்டிலே வச்சுப் பேசிக்கிடலாம்" என்றான் கிருஷ்ணபாரதி.

"ஏதோ இருக்கப் போய்தான் சத்தியம் பண்ண மாட்டேங்கறீங்க."

"மனோ, நீ இப்படிக் கேட்கறது எனக்குப் பெரிய இன்ஸல்ட்டா படுது. நெஜமாவே அவ சின்னப் பொண்ணு. நான் பத்திரிகையிலே இருக்கிறதுனாலே, அவ எழுதினதை எல்லாம் எடுத்துக்கிட்டு என் கிட்டே வர்றா. இதுக்குப் போயி நீ இவ்வளவு கஷ்டப்படணுமா?"

"என்னை ஏமாத்தாதீங்க..."

"உன்னை ஏன் நான் ஏமாத்தணும்?"

"அப்போ ஏன் சத்தியம் பண்ண மாட்டேங்கறீங்க..."

"சரி... சத்தியமா சொல்றேன். போதுமா?"

மனோகரிக்குச் சற்று ஆறுதலாக இருந்தது. "சரி... சினிமாவுக்குப் போயிட்டுச் சீக்கிரமா வீட்டுக்கு வந்து சேருங்க" என்று சொல்லிவிட்டு மொபைலை ஆஃப் செய்தாள். மனம் இலேசாவது போலிருந்தது. நிஜமாகவே அவர்களுக்குள் தவறாக எதுவுமில்லை. நாம்தான் ஏதோ வீணான கற்பனைகளைப் பண்ணியிருக்கிறோம் என்று தோன்றியது.

லா செக்ஷன் வைத்தி ஒரு ஃபைலுடன் அவளை நோக்கி வந்தார். அந்த ஃபைலைப் பார்த்ததும், சட்டென்று நாற்காலியிலிருந்து எழுந்தாள் மனோகரி. சூப்பிரண்டெண்டிடம் திட்டு வாங்க வைத்த ஃபைல் போலிருக்கிறதே.

"மனோகரி... இந்தாங்க... எல்லாம் செக் பண்ணிட்டேன்" என்றார் வைத்தி.

"மீனாட்சி டிரேடர்ஸ் ஃபைல்தானே?"

"ஆமா! நான்தானே நேத்து வாங்கிட்டுப் போனேன்.."

ஃபைலை அவளிடம் கொடுத்தார். மனோகரி ஃபைலை வாங்கிக் கொண்டாள். ரொம்பச் சந்தோஷமாக இருந்தது. கிருஷ்ணபாரதி தன்னிடம் ஃபோனில் பேசியது, காணாமல் போய்விட்டதென்று நினைத்திருந்த ஃபைல் திரும்பக் கிடைத்தது என்று, எல்லாமே நல்ல சம்பவங்களாகவே நடப்பது போலிருந்தது அவளுக்கு.

**(சுசீலா மீண்டும் வந்தாள்?)**

# அனுமார் கையாண்ட முறை!





கல்வெட்டுகள்

**அமரர் கல்கி**

இலக்கிய விமர்சனத்தில் நான் கையாளும் முறையைப் பற்றி இங்கு சிறிது சொல்ல விரும்புகிறேன். ஒரு புத்தகத்தையோ, நாடகத்தையோ, சங்கீதக் கச்சேரியையோ பற்றி எழுத விரும்புகிறவன், இரண்டு முறையில் அவற்றைப் பார்க்க வேண்டும். ஒரு பூந்தோட்டத்துக்கு நாம் போகிறோமென்று வைத்துக் கொள்ளலாம். அதை எப்படிப் பார்க்கிறோம்? முதலிலே சற்றுத் தூர இருந்து தோட்டம் முழுவதையும் ஒருங்கே பார்த்து அநுபவிக்கிறோம். பிறகு, தோட்டத்திற்குள் புகுந்து, ஒவ்வொரு செடியாக, ஒவ்வொரு பூவாகப் பார்த்து இன்புறுகிறோம்.

புத்தக விமர்சனங்கள், நாடக விமர்சனங்களைக் கையாள வேண்டிய முறையும் இதுதான். முதலில் முழுமையாகப் பார்த்து, "மொத்தத்தில் இது நன்றாயிருக்கிறதா? இலக்கிய வளர்ச்சிக்கோ, கலை வளர்ச்சிக்கோ உதவி செய்யக் கூடியதா?" என்று தீர்மானிக்க வேண்டும். முழுமையாகப் பார்க்கையில் நன்றாயிருந்தால், அதனுடைய உள் விவரங்களில் உள்ள குறைகளைப் பிரமாதப்படுத்த வேண்டியதில்லை; குறைகளை நிவர்த்திக்கும் நோக்கத்துடன் அவைகளை எடுத்துக்காட்டினால் போதும்.

முழுமையாகப் பார்க்கும்போது, 'பயனற்றது' 'கலை வளர்ச்சிக்குத் தீங்கு பயப்பது' என்று தோன்றினால், அதைப் பற்றி எழுதும் முறையே வேறு. அசோகவனத்தை அழிப்பதில் அனுமார் கையாண்ட முறைதான் அதற்குச் சரி. "இங்கே ஒரு செடி நன்றாயிருக்கிறதே" "அங்கே ஒரு பூ நன்றாயிருக்கிறதே!" என்று யோசித்துக் கொண்டிருக்க முடியாது.

இலக்கியம், நாடகம் ஆகியவைகளைப் பற்றி அபிப்பிராயம் சொல்லுமுன், அவைகளை முழுமையாகப் பார்த்துச் சிந்தித்து முடிவு செய்தல் இன்றியமையாதது. இந்த முறையைத்தான் நான் ஆரம்பத்திலிருந்து கடைப்பிடித்து வருகிறேன்.

– 'விமரிசன முறை' என்ற கட்டுரையிலிருந்து...

# அகப்பட்ட ஆவி!

கண்ணுக்கு அகப்படாத காற்றுபோல உலவும் ஆவியை கேமிராவுக்குள் கைது செய்யப் பெரும் யுத்தமே 1861-ல் தொடங்கி இன்றுவரை தொடர்கிறது. எதிர்பாராமல் நிகழ்ந்த ஒரு ஆச்சரியமான விஷயம்தான் முதல்முதலாக எடுக்கப்பட்ட ஆவியின் படம். ஆவிகளைப் படமெடுக்க முற்படாமல், அதுவாகப் ஃபோட்டோவில் விழுந்த ஆவிகளின் படங்கள்தான் அதிகம்! 1861 நியூஜெர்ஸி நகரில் கம்ப்பெல் என்ற போட்டோகிராபர் விளம்பரத்துக்காகத் தனியாக, யார் உதவியுமில்லாமல் ஒரு காலி நாற்காலியைத் தமது ஸ்டியோவில் படம் எடுத்திருந்தார். கழுவி பிரிண்ட் போட்ட பின், அதில் ஒரு பையன் இருப்பது தெரிந்தது. ஆச்சரியப்பட்டுப் போய்... அவர் நண்பர்களிடம் காட்ட, அது அந்தக் கட்டடத்தில் சில வருடங்களுக்கு முன் இறந்துபோன பையன் என்றும், படத்திலிருப்பது அவனுடைய ஆவிதான் என்றும் சொன்னார்கள். இதுதான் உலகில் முதன் முதலில் எடுக்கப்பட்ட ஆவியின் படம் என்று சொல்லப்படுகிறது. ஆனால், சரியான பாதுகாப்பு இல்லாதால், இந்தப் படத்தின் நெகட்டிவ் பிளேட்டுகள் காணாமல் போய் விட்டன. இதற்குப் பின் பல படங்கள், முதல் படமாகப் பேசப்பட்டு வந்தன. 1980 களில், கோடாக் போன்ற நிறுவனங்கள் நம்பகத்தன்மையைப் பரிசோதித்துச் சொல்லும்வரை, சர்ச்சைகள் தொடர்ந்து கொண்டிருந்தன. தொடர்ந்து 1991 ஆகஸ்ட் 10ம் தேதியில் எடுக்கப்பட்ட ஒரு படம்தான், இன்றுவரை ஆவியின் முதல்படமாக அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது.

சிக்காகோவில் ஆவிகளை ஆராய்ச்சி செய்யும் குழு ஒன்று அங்குள்ள கல்லறை தோட்டத்தில் தங்கள் ஆராய்ச்சிகளைத் தொடர்ந்துகொண்டிருந்தது. அப்போது மாரி ஹஃப் என்பவர் தனது இன்ப்ராரெட் கேமிரா மூலமாக, பல படங்கள் எடுத்திருந்தார். அதில் ஒன்றுதான் இந்தப் படம். காலியான மேடையை கேமிராவில் எடுத்த பின் கழுவிப் பார்த்ததில், அதில் அமர்ந்திருந்தது ஒரு பெண்ணின் உருவம்! அந்த உருவம் அணிந்திருந்த உடையின் ஸ்டைல் பல ஆண்டுகள் பழையது. அந்தப் படம் உடனிருந்த ஆவி ஆராய்ச்சிகாரர்களுக்கு, அது காலி மேடையென்பது தெரியும். இருந்தாலும் பல ஆராய்ச்சிகளுக்குப் பின்னர், அந்தப் புகைப்படத்தின் நம்பகத்தன்மையைச் சோதித்தனர். இந்தப் புகைப்படத்தில்

எந்த டிரிக்கும் இல்லை. அதில் பதிவாகியிருப்பது, படம் எடுக்கும்போதே பதிவான உருவம்தான் என அறிவிக்கப்பட்டது. இந்தப்படம்தான் இன்றும் பார்க்கக்கூடிய, உலகில் முதன்முதலாய் ஃபோட்டோவில் எடுக்கப்பட்ட ஆவி எனலாம்.



**இந்தப் புகைப்படத்தில் எந்த டிரிக்கும் இல்லை. அதில் பதிவாகியிருப்பது ஆவியின் உருவம்தான்.**

இம்மாதிரி படங்கள், தகவல்களையெல்லாம் திரட்டிப் பத்திரப்படுத்தி வைத்திருப்பவர்கள் அமெரிக்க கோஸ்ட் சொசைட்டி. 1996-ல் துவங்கப்பட்ட இதில், உலகின் பல ஆவி ஆராய்ச்சியாளர்கள், பேராசிரியர்கள், ஃபோட்டோ வல்லுனர்கள் உறுப்பினர்கள். உண்மையாகவே ஆராய்ச்சியில் ஈடுபட்டவர்களுக்கு மட்டும்தான் அனுமதி. அனுமதிக்கப்பட்டவர்களின் முதலாண்டு பங்களிப்பைப் பார்த்த பின்னர்தான், அடுத்த ஆண்டு அவர்கள் உறுப்பினராகத் தொடர அனுமதிக்கப்படுவர்.

இது போன்ற கட்டுப்பாடுகளைக் கொண்டிருக்கும் இந்த சொஸைட்டியின் தலைமையகம் சிக்காக்கோவிலிருக்கிறது. அங்கு ஒரு மியூசியம் நிறுவி, அதில்தான் இந்தப் படங்களையும், தொடர்ந்து கிடைத்த படங்களையும் பல தகவல்களையும் வைத்திருக்கிறார்கள். இதுபோல் நூறு படங்களுக்குமேல் இங்கிருக்கின்றன.

இந்த அருங்காட்சியகத்தில் சமீபத்தில் இணைக்கபட்ட படம் இது: கையில் ஒரு சிறு குழந்தையுடனும், தலையில் தொப்பியுடனும் இருக்கும் ஒரு தாய். பட்டமளிப்பு விழாவில் எடுக்கப்பட்ட இந்தப் படத்தில், குழந்தையின் அருகிலிருக்கும் நீல ஒளி ஒரு ஆவியென்பதைச் சொல்லும் இந்த சொசைட்டி, குழந்தையைப் பற்றிய விவரங்களை, அதன் நலன் கருதி வெளியிடவில்லை. அந்த ஆவி அந்தக் குழந்தை



• நீல நிறத்தில் ஆவி

யைக் காப்பாற்றி கொண்டிருக்கிறதோ அல்லது வேறு ஏதேனும் நிகழ்ந்ததோ தெரியவில்லை.

ஆவிகளுக்கு மரணமில்லை; அவை தொடர்ந்து வாழ்பவை என்று சொல்லப்படுகிறது. இது அந்த ஃபோட்டோக்களின் மர்மங்களுக்கும் பொருந்தும்.

**- ரமணன்**

# தமிழ்ப் புத்தாண்டு பலன்கள்

## சென்ற வாரத் தொடர்ச்சி...

### துலாம்:

**பொதுப்பலன்:** இந்த ஆண்டு முழுதும் குதூகலம் நிரம்பி வழியும். வீடு வாங்கும் யோகம் கிட்டும். சுப காரியம் தடங்கலின்றி நிறைவேறும். நிலுவையில் இருந்த கொடுக்கல் வாங்கலுக்குத் தீர்வு கிடைக்கும். சினிமா முயற்சிகள் முன்னேற்றப் பாதையில் போகும். வியாபாரம் அமோக லாபம் தரும்.

**பலம்:** உடன் பிறந்தோரின் ஆதாயம் கிட்டும். தூரத் தேசம் செல்வீர்கள். வழக்கு முடிவுக்கு வந்து மனச்சஞ்சலம் தீரும். அரசியலில் செல்வாக்கு கூடும். எக்ஸ்போர்ட் - இம்போர்ட்ஸ் தான் கிளப்பும். பெண்களுக்கு யோகமான காலமிது.

**பலவீனம்:** ஏதுமில்லை.

**பரிகாரம்:** அவசியமில்லை.

### விருச்சிகம்:

**பொதுப்பலன்:** முதல் ஆறு மாதம் மந்தமான காலம். புதிய தொழில் வேண்டாம். வீண் வாக்குவாதங்களில் ஈடுபடுதல் கூடாது. புதியவர்களிடம் எச்சரிக்கை தேவை. வீடு, வாசல், வாகனம் வாங்குவதிலும் தாமதம் ஏற்படும். தொழில் வருவாய் இருந்தாலும், அதற்கேற்ற செலவினங்கள் வந்து சேரும். ஆண்டின் பிற்பகுதியில் நல்ல பலன்கள் நடக்கும்.

**பலம்:** ஏதுமில்லை.

**பலவீனம்:** வீண் ஊர் வம்புகள் வந்து சேர்வதுதான்.

**பரிகாரம்:** செவ்வாய், வியாழன், வெள்ளி ஆகிய தினங்களில் நவக்கிரக வழி பாடு செய்துவர, நற்பலன்கள் விளையும்.



தஞ்சை பரத்வாஜ்

## தனுசு:

**பொதுப்பலன்:** பல அரிய சாதனைகளைச் செய்யும் ஆண்டு. வியாபாரம், சுய தொழில்களில் லாபம் பெருகும். சிலருக்கு வெளிநாட்டுப் பயணங்கள் அமையும். சிலபேர் பதவி உயர்வு பெறும் வாய்ப்பும் உண்டு. ஏற்றுமதி, இறக்குமதித் தொழில் சிறப்பாக நடைபெறும். மொத்தத்தில் யோகராஜ்யம் உங்களுடையதுதான்!

**பலம்:** உடன் பிறந்தவர்களின் ஆதரவு பெருகும். வழக்குகள் முடிவுக்கு வரும். தந்தை வழி சொத்துகள் வந்து சேரும். உங்கள் வாக்குக்கு மரியாதை கூடும். மேன்மேலும் வளம் சேரும். நற்பலன்கள் அதிகரிப்பால், நினைவெல்லாம் மணக்கும் காலமிது!

**பலவீனம்:** ஏதுமில்லை.

**பரிகாரம்:** தேவைப்படவில்லை.

## மகரம்:

**பொதுப்பலன்:** ஆண்டுத் தொடக்கமே அமோக மகிழ்ச்சியுடன் ஆரம்பம். புதிய தொழில் தொடங்க ஏற்ற காலம். கடன் பிரச்னைகள் பறந்தோடும். தந்தை வழி சொத்துகள் வந்து சேரும். கல்வியில் மேம்பாடு காண்பீர்கள். உத்தியோக உயர்வு கிடைக்கும். ஆண்டு முழுவதுமே ஆனந்தம்!

**பலம்:** உங்கள் வாக்கு வன்மைக்கு மரியாதை. தொட்டதெல்லாம் துலங்கும் கைவாசம். அரசியலிலும் வெற்றிமாலை சூட வாய்ப்பு, வழக்குகள் ஏதாவது இருப்பின், சுமுகமாக முடிவுக்கு வரும்.

**பலவீனம்:** ஏதுமில்லை.

**பரிகாரம்:** தினமும் ஆஞ்சநேயர் வழிபாடு செய்துவர, நற்பலன்கள் அதிகமாகும்.

## கும்பம்:

**பொதுப்பலன்:** ஆண்டின் மத்திய காலத்தில் அதிகமான நற்பலன்கள். நீண்ட நாள் மன உளைச்சல் முடிவுக்கு வரும். கடன் தொல்லை தீரும். உடல்நலம் சீராகும். உறவினர்கள் தொடர்பு நன்மையைத் தரும். வரவேண்டிய நிலுவைகள் வந்து சேரும்.

**பலம்:** உங்கள் நாணயம் உங்களைக் காப்பாற்றும். கலைஞர்கள் வளம் பெறுவார்கள். புதிய முயற்சிகள் வெற்றி தரும்.

**பலவீனம்:** ஏதுமில்லை.

**பரிகாரம்:** வியாழன்தோறும் குருவை வலம் வர, நற்பலன்கள் அதிகமாகும்.

## மீனம்:

**பொதுப்பலன்:** ஆண்டின் தொடக்கமே ஆனந்தமும், மகிழ்ச்சியுமாக இருக்கும். வீடு, வாசல், வாகன யோகம் வந்து சேரும். பட்ட சிரமங்கள் பறந்தோடி விடும். மனச் சஞ்சலங்கள் விலகிப் போகும். வாணிபம் செழிக்கும். வளம் கொழிக்கும். குடும்பம் ஏற்றம் பெறும்.

**பலம்:** பூர்விக சொத்து, புதிய தொழில் முயற்சி வெற்றி பெறும். வாகனத் தொழில், அச்சு, உலோகத் தொழில்கள் சிறந்து விளங்கும். அயல்நாட்டுப் பயணம் தேடி வரும்.

**பலவீனம்:** வேலைப்பளு அதிகம். அலைச்சலும் கூடும்.

**பரிகாரம்:** சனிக்கிழமைதோறும் ஆஞ்சநேயர் வழிபாடும், ஆஞ்சநேயருக்குத் துளசி மாலை சாற்றிவர, நற்பலன்கள் அதிகமாகும். ●

# நடக்குமென்பார்; நடக்கும்

மருதன்




# இறந்தவர்கள் விண்ணப்பிக்கலாம்!

வைக்க முடிந்தால், எவ்வளவு நன்றாக இருக்கும் என்று யோசித்தோம். உடலைப் பதப்படுத்தும் இந்த இயக்கத்தையும் ஆரம்பித்தோம். விட்ரிஃபிகேஷன் (Vitrification) என்று இதற்குப் பெயர்.

தீர்க்கப்படமுடியாதது என்று நாம் முன்னர் கருதிவந்த பல நோய்களை மருத்துவ உலகம் இன்று தீர்த்துவிட்டது.

அதே போல், பிற்காலத்தில் நானோ டெக்னாலஜி, ஜெனிடிக்ஸ் துறைகள் இறப்பைத் தடுத்து நிறுத்திவிடக்கூடும். அந்தச் சமயத்தில் நம் உடல் இவ்வுலகில் இல்லாவிட்டால் என்ன ஆகும்?

எனவே, மருத்துவ உலகம் உரிய இடத்துக்கு முன்னேறும்வரை உடலை நாங்கள் தயார் நிலையில் வைத்திருக்கிறோம். மரணத்தை வெல்ல வேண்டும் என்று நீங்கள் விரும்பினால், உங்கள் உடலை எங்களுக்குத் தாருங்கள். நாங்கள் உங்களைப் பாதுகாக்கிறோம்'' என்கிறது அல்கோர்!

அட! என்று நாம் ஆச்சரியப்படும்போது... இதை விட அதிர்ச்சியளிக்கக் கூடிய ஒரு சந்தேகத்தை, அல்கோரின் முன்னாள் நிர்வாக இயக்குநர் லாரி ஜான்சன் எழுப்பியிருக்கிறார். "புகழ்பெற்ற பேஸ்பால் வீரரான டெட் வில்லியம்ஸின் உடலை நாங்கள் பதப்படுத்தி வந்தோம். எல்லாம் நல்லபடியாகச் சென்றுகொண்டிருந்தது. ஆனால், ஒரு கட்டத்தில் அல்கோரின் பணியாளர்கள் சிலர், டெட்டின் தலையைத் தனியே பிய்த்து எடுத்துவிட்டார்கள். பிறகு அந்தத் தலையை உருட்டி பேஸ்பால் போல் விளையாட ஆரம்பித்துவிட்டார்கள்... ஏனோ பயமாக இருக்கிறது."

ஐயோ! அங்கேயும் நிம்மதியில்லையோ? ஆனாலும் உயிர்க்கும் விந்தையை உலகம் கண்டுபிடித்தால், என்றாவது ஒருநாள் மீண்டும் உயிரோடு வரலாமே என்று இங்கு வருவோர் எண்ணிக்கை மட்டும் அதிகரித்துக் கொண்டேயிருக்கிறது! ○



எம்.ஜி.இராஜா

**எ**ன் முதல் பையன் சரவணக்குமார். பதினாலு வயசுல தற்கொலை பண்ணிட்டுச் செத்துப் போய்ட்டான். பித்துப் புடிச்சாப்ல ஆயிடுச்சு; வாழ்க்கையே வெறுத்தும் போயிடுச்சு. ஆர்மியில வேலை பார்த்தவன் நான். என் மனசை நானே, கொஞ்சம் கொஞ்சமா தேத்திக்கிட்டேன்.

உடம்புல புக ஆரம்பிச்சான். அட... ஆமாங்க. நடுச்சாமத்துல என் உடம்புல பூந்து, என்னிய தூங்க வுடாமப் பண்ணிரு வான். அலறியடிச்சு எந்திரிப்பேன். பல நாள் இரவு தூக்கமில்லாம தவிச்சேன். இதுக்கு என்ன செய்யலாம்னு யோசனைக்கு, வால்பாறை மாந்திரீகர் ஈஸ்வரன்ட்ட போனேன்.

"ஒம் பையன் கையில வேலோடும், இடையில கோவணத்தோடும் வர்றான். இறந்தவங்க அப்பிடி வரக்கூடாது. என்ட்ட பேசக் கேட்டா, பேச மாட்டேங்கறான். தன்னோட அப்பாகிட்டேதான் பேசுவேன்னு அடம்பண்றான்"னு சொன்னாரு. என்னடா இது இப்படிச் சிக்கலா போச்சேன்னு வீடு வந்து சேர்ந்தேன்.

அதுலேர்ந்து, அப்பப்ப சரவணன் ஆவியோட பேசத் தொடங்கினேன். என் உடம்புல வழிகாட்டி ஆவியா அவன் எறங்கி, என்னை இயக்க ஆரம்பிச்சான். இதுவும் ஒரு வகையில, கூடு விட்டுக் கூடு பாய்ற காரியம்தான். கடந்த காலங்கள்ல சரவணன் ஆவி சொன்ன அத்தனையும் நடந்துச்சு. இப்பவும் அவன் சொல்லிட்டு வர்ற ஒவ்வொண்ணும் நடந்துட்டே வருது.

மத்தியில் வாஜ்பாய் அரசு மீதான

# கூடு விட்டுக் கூடு பாய்ந்து!

நம்பிக்கை வாக்கெடுப்பில், மத்திய அரசு கவிழும், ஜெயலலிதா வெற்றி பெறுவார்ன்னு முன்கூட்டியே கணிச்சோம். அதை அப்படியே டெல்லியில இருந்த ஜெயலலிதாவுக்கு தந்தி மூலமா தெரிவிச்சேன். 2006 தேர்தல்ல, தி.மு.க.-காங். கூட்டணி வெற்றி பெறும். ரேபரேலியில சென்ற தடவையை விட, அதிக வோட்டுல சோனியா காந்தி வெற்றி பெறுவார்ன்னு அவருக்கு ஃபேக்ஸ் அனுப்பிச்சிருந்தேன். தேர்தல் வோட்டு எண்ணிக்கை முடிஞ்சு, வெற்றி பெற்றதுக்கப்புறம், சோனியா காந்தி எனக்கொரு நன்றிக் கடிதம் அனுப்பியிருந்தாங்க.''



● சரவணக்குமார்

இப்படியெல்லாம் அற்புதங்கள் நிகழ்த்துற சரவணக்குமாருக்கு, 'கோயில் கட்டு, கோயில் கட்டுன்னு' என் உள் மனசு தூண்டிச்சு. தேவர் ஜெயந்தியப்ப அவனைப் பசும்பொன் கூட்டிட்டுப் போவேன். "என்னியும் நீங்க கும்பிடுற காலம் வரும்!''னு சொல்லிட்டேயிருப்பான்.

2005-ல் வீட்டின் கன்னி மூலையில, சரவணக்குமாருக்கு கோயில் கட்டி, கும்பாபிஷேகம் பண்ணினேன். என்னோட பன்னெண்டு வருஷ அனுபவத்துல, ஆவியுலகத்துல நான் மிதக்கறப்ப, சரவணக்குமார் ஆவி என் உடம்புல பூந்துக்கும். நான் அப்ப பெட்டி பாடியா ஆய்டுவேன். சரவணக்குமார் ஆவி என் உடம்புலேர்ந்து பிரிஞ்சு போனதுக்கு அப்புறம்தான், நான் இயல்பு நிலைக்கு வருவேன்'' சர்வசாதாரணமாகப் பேசுகிறார் எம்.ஜி.இராஜா!

உங்க ஆவியுலகத்துல லேட்டஸ்ட்டா என்ன தகவல்? எனக் கேட்டோம். இப்ப துணை முதல்வரா இருக்கற முகஸ்டாலின், தமிழக முதல்வராக ஆட்சி புரிவார்!'' என்றார் சிவகாசியில் வசிக்கும் இந்த ஆவியுலக ஜோதிடர்!

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



"எனக்கும் என் மனைவிக்கும் சண்டைன்னு எப்படிச் சொல்றீங்க டாக்டர்?''

"உங்க முகம் தான் பேயறைஞ்ச மாதிரி இருக்கே!''

ஷ.ராமநாதன்

**கலக்க வருதுப்பா**

# கல்கி

## ரீடர்ஸ் கெட் ரெடி

**தர்மபுரி-கிருஷ்ணகிரி மாவட்டங்களின் கற்கண்டு வாசகர்களே!**

## இப்ப உங்க ஊருக்கே வருது கல்கி டீம்...

- உடனடித் தேவை?
- உங்க ஊர்ப் பெருமை?
- வாட்டம் தரும் வேதனை?
- அமைதி தரும் ஆலயங்கள்?
- பெருமைப்பட வைக்கும் தலைவர்கள்?
- மனசைச் சுத்திகரிக்கும் டூரிஸ்ட் ஸ்பாட்?
- கலை இலக்கியத்தில் உங்க மாவட்டங்களின் பங்களிப்பு?
- அடிப்படைத் தேவைகள் நிறைவேறிடுச்சா... இல்லையா?

**வாசகர்களே...**

உங்க மாவட்டங்களைப் பத்தி நீங்க அனுப்புற தகவல்கள்தான்
**கல்கி** தர்மபுரி-கிருஷ்ணகிரி மாவட்ட ஸ்பெஷல் இதழ்களுக்கு அஸ்திவாரம்!

**விவரங்கள் எதிர்ப்பக்கத்துல இருக்கு!**



ஒகேனக்கல்

**ஆ**மாம்! உங்கள் தர்மபுரி - கிருஷ்ணகிரி மாவட்டங்களுக்கு 'கல்கி' டீம், நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்!

சில சிம்பிள் கண்டிஷன்ஸ்...

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்புகள் மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).
- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- தர்மபுரி - கிருஷ்ணகிரி மாவட்டங்களின்.. பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ். ஆன்மிக, வியாபார, சுற்றுலாத் தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன். சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல். நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ்... என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசித் தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

**கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசித் தேதி : 22.05.2010**

**கலக்க வருதுப்பா கல்கி**
**தர்மபுரி - கிருஷ்ணகிரி மாவட்டங்கள்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்
☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32



# நீங்க ச்சும்மா கோடு போடுங்க...
# நாங்க உடனே ரோடு போடறோம்!

# ஒன்ஸ்மோர்... மொய்தீன்!

ம்பாய் எக்ஸ்பிரஸ் அரக்கோணம் ஸ்டேஷனில் வந்து நின்றது. என்னுடைய படுக்கைப் பொருட்களையும் இறுதியில் என்னையும் அந்த வண்டிக்குள் இருக்கும்படி செய்வதாகக் கூறி, ஐந்து ரூபாய் அதற்கு பேரம் பேசி ஒரு போர்ட்டர் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருந்தார்.

ஒரு மூட்டைப்பூச்சிக்கு ஒளிவதற்குக் கூட இடமில்லாத அந்த வண்டிக்குள், என்னுடைய பெட்டியையும் படுக்கையையும் மூட்டைகளையும், இறுதியில் என்னையும் நுழைத்து விடக்கூடிய வித்தை அந்த போர்ட்டருக்கு மட்டுமே தெரியும்.

கூப்பாடு, திட்டுதல், முனகல், உந்துதல், தள்ளுதல், மல்யுத்தம், தலைகுப்புற விழுதல், உரத்த குரலில் சத்தம் போடுதல் ஆகிய களேபரங்களுக்கு மத்தியில், அந்த போர்ட்டர் என்னை எப்படி அந்தப் பெட்டிக்குள் நுழையும்படி செய்தார் என்பது எனக்கே தெரியாது. வண்டி நகர்ந்தபோது, நான் வானத்தில் பயணிப்பதைப் போல உணர்ந்தேன் என்பது மட்டும் உண்மை.

வண்டியின் இன்னொரு பக்கத்தின் கதவுக்கு அருகில் நின்று கொண்டிருந்த ஒரு மலையாளியான இளம் பட்டாளக்காரனை நான் வெறித்துப் பார்த்தேன். தவிட்டு நிறத்தில் இருந்த உறுதியான உடல்... தலையில் ஒரு நசுங்கிய நிலையில் இருந்த 'ஓவல் சீஸ்' தொப்பியை அந்த ஆள் அணிந்திருந்தான். பர்மாப் போரில் பங்குபெற்றதன் அடையாளமான ஒரு பதக்கம் மார்பில் தொங்கிக் கொண்டிருந்தது. கரிய முகத்தில் பெரிய ஒரு கீறல் இருந்தது. வயது கிட்டத்தட்ட இருபத்து இரண்டு இருக்கும்.

அவனுடைய பெயர் மொய்தீன் என்பதை நான் தெரிந்து கொண்டேன். அவனும், அவனுடைய நண்பர்களான வேறு நான்கு பட்டாளக்காரர்களும், நான் பெட்டிக்குள் கால் வைப்பதற்கு உதவினார்கள்.

வண்டி அடுத்த ஸ்டேஷனை நெருங்கியபோது, மொய்தீன் தன்னுடைய பட்டாளத்திற்கே உரிய மிடுக்குடன் வாசலில் காவல் காக்க ஆரம்பித்தான். வண்டி ஸ்டேஷன் ப்ளாட்ஃபாரத்தில் போய் நின்றது. மக்கள் முண்டியடித்து ஏற முயன்றனர்.

'யஹ் மிலிட்டரி கம்பார்ட்மெண்ட் ஹை!' தடுத்து நிறுத்

---

**மலையாளத்தில்: எஸ்.கெ.பொற்றெக்காட்**

**தமிழில்: சுரா**

னான். நாங்கள் அவனை அமைதிப்படுத்தி னோம். 'மொய்தீன், நடந்தது நடந்ததாக இருக்கட்டும். சரி... சிட்டகாங்கில் இருந்து வெளியேற்றப்பட்ட கதையை நீ சொல்லவே இல்லையே! அதைச் சொல்லு!' என்றோம்.

மொய்தீன் அந்தக் கதையைக் கூறினான்.

'எனக்கு மலேரியா காய்ச்சல் வந்து மிகவும் மோசமான நிலையில் இருந்தேன். விடுமுறை வேண்டுமென்று நான் ஓ.சி.யிடம் சொன்னேன். அவர் மறுத்து விட்டார். எனக்குத் தாங்க முடியாத கோபம் வந்தது. பரேடுக்கு வர மாட்டேன் என்று நான் அவரிடம் உறுதியான குரலில் சொன்னேன். அவருக்கும் கோபம் வந்து விட்டது. 'யூ ப்ளடி ஃபூல்' என்று அவர் என்னைப் பார்த்துச் சொன்னார். நான் அவருக்கு முன்னால் நடந்து நின்று சொன்னேன்: 'ஐ நோ ப்ளடி ஃபூல்... ப்ளடி ஃபூல் யூ!'

அவர் என்னை அடிப்பதற்காகக் கையைத் தூக்கினார். அடி எங்கே கிடைத்து விடப் போகிறதோ என்று எதிர்பார்த்து, நான் அவருடைய கன்னத்தில் ஒரு அடி கொடுத்தேன். எனக்கு மூன்று மாத சங்கிலி கிடைத்தது!

இப்படி அவன் பல வாழ்க்கைக் கதைகளையும் எங்களிடம் கூறிக் கேட்கும்படி செய்தான்.

மொய்தீன் ஒரு ரசிகனாக இருந்தான். கோழையாகவும், எதிரிகளை நோக்கி ஒரு முறை கூட அவன் இதுவரை சுட்டதே இல்லையாம். போர் செய்வதில் இருக்கும் பயத்தை அவன் வெளிப்படையாக ஒப்புக் கொள்ளவும் செய்தான்.

காயமடைந்தவர்களை எடுத்து லாரியில் போட்டு முகாமிற்குக் கொண்டு வரக்கூடிய பிரிவில், அவன் உறுப்பினராக இருந்தான். அதாவது ஒரு பட்டாளக் கூலி. சுயநலமும் கொடுமையும், இரக்கமின்மையும்... நரகத்திற்கு இணையான அந்தப் போர்க்களத்திலும் நடந்தவை இவைதான் என்றான் அவன். மீண்டும் தன்னுடைய சொந்தங்களைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் அவனைத் தொல்லைப்படுத்திக் கொண்டிருந்தது. எப்படிப் பார்த்தாலும், அவனுக்கு விடுமுறை கிடைப்பதற்கான வழியே இல்லை. இறுதியில் அவன் ஒரு தந்திரத்தைக் கையில் எடுத்தான். குன்றுமணியை அரைத்து, தன் கண் இமைகளில் தடவினான். கண்கள் பயங்கரமாக சிவந்து வீங்கி விட்டன. அது எப்படிப்பட்ட பெரிய நோய் என்பதை ராணுவ மருத்துவர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. 'கண்களில் எறும்பு கடித்த வலி கூட இல்லை. ஆனால், வெளியே பார்க்கும்போது, பயம் தோன்றுகிறது' அவன் தான் உண்டாக்கிய



**"இன்ஸ்பெக்டர் கபாலியை எதுக்கு அடிக்கிறாரு?"**

**"அவரைப் பாராட்டி 'மாமூல் சக்கரவர்த்தி'னு போஸ்டர் அடிச்சானாம்!"**

**- நக்கீரன், ஆவடி**

கண் நோயைப் பற்றிக் கூறினான். இறுதியில் அவனை பம்பாய்க்கு அனுப்பினார்கள். பம்பாயிலிருந்து இரண்டு மாத விடுமுறையில் சொந்த ஊருக்கு வருவதற்கு அவனால் முடிந்தது.

'வாடி' ஸ்டேஷனில் நாங்கள் குடிக்க தீர்மானித்தோம். 'மொய்தீன், உனக்கு தேநீர் வேண்டாமோ?' நான் கேட்டேன்.

'கையில் காசில்லை. நான் பாப்பராக இருக்கிறேன் சார்' - அவன் ஒரு புன்னகையுடன் சொன்னான்.

உண்மைதான். படுக்கை, ஆடை, ஒரு ட்ரங்க் பெட்டி, பாக்கெட்டில் சம்

**"மொய்தீன் உன் கையில் காசே இல்லை என்று சொன்னாயே?"**



பளப் புத்தகம், மிலிட்டரி வாரண்ட் - இவற்றைத் தவிர அவனிடம் காலணா கூட இல்லை. நாங்கள் அவனுக்கு தேநீரும் பலகாரமும் வாங்கிக் கொடுத்தோம்.

'மண் தின்னப் போகும் உடல்தானே பீபி உனக்கு! என்ன கேடு வந்து சேரும் பீபி உனக்கு!' - மொய்தீன் வண்டியின் கதவிற்கு அருகில் உட்கார்ந்து வெளியே பார்த்தவாறு உரத்தக் குரலில் பாடிக் கொண்டிருந்தான். ஆபாசமாக இருந்தாலும், ஆசையை வெளியிடும் இனிமையான அந்த முஸ்லீம் 'மாப்பிள பாடல்' எங்களை ரசிக்கச் செய்தது. 'ஒன்ஸ்மோர், மொய்தீன்' - எங்களில் ஒரு ஆள் சத்தம் போட்டுச் சொன்னார். பாராட்டுக் கிடைத்த சந்தோஷத்துடன் அவன் ஐந்தாறு பாடல்களைத் தொடர்ந்து பாடினான்.

மூன்று நான்கு மணி நேரங்கள் தாண்டியதும், ஒரு தட்டில் சில மாம்பழங்களை வைத்துக் கொண்டு அவன் எங்களை நோக்கி வந்தான். எங்கள் எல்லோருக்கும் மாம்பழத்தைப் பிரித்துக் கொடுத்தான்.

நான் கேட்டேன்: 'மொய்தீன், உன் கையில் காசே இல்லை என்று சொன்னாயே?'

மொய்தீன் கண்களைச் சற்று சிமிட்டிக் கொண்டே ஒரு புன்னகையைத் தவழ விட்டான். 'என் மிலிட்டரி கம்பளியை நான் அந்த நீதிமன்ற சிப்பாய்க்கு முன்னூறு ரூபாய்க்கு விற்று விட்டேன்' அவன் மாம்பழத்தைச் செதுக்கிக் கொண்டே சொன்னான்.

அந்த முன்னூறு ரூபாயில் ஒரு பைசா கூட மீதியில்லாமல், முழுமையாகக் காலியாவது வரை, அவன் ஒவ்வொரு



**"என் மிலிட்டரி கம்பளியை நீதிமன்ற சிப்பாய்க்கு முன்னூறு ரூபாய்க்கு விற்றுவிட்டேன்."**

தின் பண்டமாக வாங்கி எங்களைச் சாப்பிடச் செய்து கொண்டிருந்தான்.

'கல்யாண்' ஸ்டேஷனில் அவன் எங்களிடம் விடைபெற்றுக் கொண்டு, படுக்கையையும் பெட்டியையும் தூக்கிக் கொண்டு, ப்ளாட்ஃபாரத்தில் குதித்தான்.

'குன்றுமணி கிடைத்தால் நான் விரைவிலேயே மீண்டுமொருமுறை சொந்த ஊருக்கு வருவேன்'- அவன் ப்ளாட்ஃபாரத்தில் நின்றுகொண்டே, ஒரு திருட்டுச் சிரிப்புடன் சொன்னான்.

நான் அலங்கமலங்க விழித்து எழுந்தேன்.

**ரமணன்**

**மெ**ள்ளப் போய்க் கொண்டிருந்த கார் சட்டென்று நின்றது. படக்கென்ற சத்தத்துடன் அது காரின் முன்புறம் தாவி பானட்டில் அமர்ந்துகொண்டது. காரின் உள்ளே அதுவரை பேசிக்கொண்டே வந்தவர்களின் சப்த நாடியும் ஒடுங்கி விட்டது. டிரைவர் செய்வதறியாது என்ஜினை ஆஃப் செய்து விட்டார். ரோட்டைப் பார்த்து உட்கார்ந்திருந்த அது, மெல்லத் திரும்பிப் பார்த்துக் காரின் வைப்பரை காலால் நோண்ட ஆரம்பித்தது. பின்சீட்டிலிருந்த உள்ளூர் நண்பர் மெதுவாக நழுவிச் சீட்டின் இடையில் பதுங்குகிறார். மற்றவர் பயத்தில் நடுங்கிக்கொண்டிருக்கிறார். தாய்லாந்துக்கார டிரைவர் பையிலிருக்கும் புத்தர் படத்தை எடுத்து கையில் வைத்துக்கொண்டு கண்களை மூடி அழத் தொடங்குகிறார். முன் சீட்டில் நான் பயத்தில் உறைந்துபோய், கண்ணாடிக்கு வெளியே சில அங்குல தூரத்தில் குளோசப்பில் தெரியும் அதைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஒரே அடியில் எதிரே இருக்கும் இந்தக் கண்ணாடியை நொறுக்கினால், அடுத்தவினாடி நாம் காலி என்ற நிலையில், கண்முன்னே கலைடாஸ்கோப்பாக மனைவி, குழந்தைகள், அப்பா, தம்பி எல்லோரும் வந்து போகிறார்கள்.செய்ய முயற்சிக்கும் பிரார்த்தனைகள் எல்லாம் மறந்துபோகின்றன. எங்களுக்கு மரணத்தின் நுனியைத் தொட்டுக் காட்டிக் கொண்டிருக்கும் அந்தப் புலி, எதைப்பற்றியும் கவலைப்படாமல் திரும்பி உட்கார்ந்து ரோட்டை பார்த்துக்கொண்டிருந்தது.

**பா**ங்காக் நகருக்கு வெளியே இருக்கிறது சஃபாரி வோர்ல்ட். டால்ஃபின் ஷோ நடைபெறும் மரைன் லாண்ட், பலவண்ணப் பறவைகள் நிறைந்த பேர்ட்ஸ் லாண்ட் என 180 ஏக்கரில் பரந்து விரிந்திருப்பது. இயற்கைச் சூழலில் மிருகங்கள் சுதந்திரமாகத் திரிகின்றன. தங்களிருப்பிடத்திலிருந்து சட்டென்று வெளியே வரமுடியாத அமைப்பில் கொடிய மிருகங்கள். நட்பாகப் பழகும் மிருகங்கள் ரோட்டில். இருபது மைல் நீண்ட அந்த ரோட்டில், நமது காரிலேயோ அல்லது அவர்களின் பஸ்ஸிலேயோ போகலாம். காரைவிட வேகமாகச்செல்லும் நெருப்புக்கோழி, கார் கண்ணாடிக்கு அருகில் வந்து ஹலோ சொல்லுகிறது. உயரமான ஓலைக் குடைகளின் கீழிருக்கும் ஒட்டகச்சிவிங்கி, மெல்ல வந்து காரின் டாப்பை மூக்கால் தொடுகிறது. கைக்கெட்டும் தூரத்தில் காண்டாமிருகம். இப்படி ஒரு புதிய அனுபத்தில் அந்த சஃபாரி பார்க்குக்குள் போனபோதுதான் இது நிகழ்ந்தது. டிக்கெட்டுடன் தரும் பாதுகாப்புக் குறிப்பில், ''விபத்துகள் நிகழ வாய்ப்பில்லை. அப்படி நேர்ந்தால், பைனாகுலரில் கவனித்துக் கொண்டிருக்கும் மார்ஷல்கள் வந்து மிருகத்தை வெளியேற்றி விடுவார்கள்'' என்றும் நாம் செய்யக்கூடாதவைகளையும் பட்டியலிட்டிருக்கிறார்கள். அதில் முக்கியமானவை: 'கத்தாதீர்கள், காரை விட்டு இறங்காதீர்கள். ஹாரன் அடிக்காதீர்கள், ஃபோட்டோ எடுக்காதீர்கள்!' என்பன. ஐந்து நிமிடத்திற்குள் ஒருவித 'விநோத



ஒலியுடன் வந்தது வெள்ளை வேன். துப்பாக்கிகளுடன் கார்டுகள். வேனுக்கு முன்னே பொருத்தப்பட்ட ஒரு கிரேன். உள்ளேயிருந்து டிரைவர் இயக்குகிறார். ஏதோ ஒரு வளையத்தைத் தூக்கிப் போட்டவுடன், காரின்மேல் புலி எழுந்து நின்றது. உடனே கிரேனிலிருந்து கயிறுடன் தொங்கிய அரைவளையக் கொக்



# நீண்ட நிமிடங்கள்!

'திக்' பயணம்

கியை அதன் வயிற்றில் மாட்டி இறுக்கி, அப்படியே தூக்கி அருகிலுள்ள அதனிடத்தில் விட்டுவிட்டார்கள். அது மெல்ல நடந்து போய் எங்களை முறைத்தபடியே படுத்துக் கொண்டது. இவை எல்லாம் நடந்தது ஐந்து நிமிடத்திற்குள்தான். ஆனால் அது எங்கள் வாழ்க்கையின் மிக நீண்ட நிமிடங்கள். அருகில் வந்த அந்த கார்டு, நமது காரைத் தட்டி கண்ணாடியை இறக்கச் சொல்லி "அந்தப் புலி புதுசு. சில நாட்களில் பழகிவிடும். பயப்படாமல் போங்கள்" என்றார். பிறகு பயத்தோடு நாங்கள் போனது அந்த சஃபாரியிலிருந்து வெளியே செல்லும் கேட்டிற்குதான்! ●




# அவல் போல அவள் நினைவை மென்றேன்!

பொற்கிழி

5

**சொ**ல்லூறும் கவிபோல சுகமான தமிழ்போல
தென்றலென அவள் நடந்து சென்றாள் - என்
நெல்லூறும் வயல்நெஞ்சில் நின்றாள்.

ஒருபார்வை வீசியதால் உள்நெஞ்சு கூசியதால்
உள்ளுக்குள் சிரிப்புற்று நின்றேன். காணும்
பொருளெல்லாம் அவளாகக் கண்டேன்.

சீமைக்குச் சென்றங்கு சிலகாலம் தங்கிப்பின்
திரும்பவும் ஊர்வந்து சேர்ந்தால் - அந்தச்
சீமைப்போல் எனக்கின்பம் தந்தாள்.

கண்ணுக்குள் இன்பத்தைக் கண்ணாலே தந்தாளே
கண்மூடி நீட்டித்துத் தைத்தேன் - பின்
என்னுள்ளே எனைமீட்டு வைத்தேன்.

அவள் சென்று வெகுநேரம் அங்கேயே விலகாமல்
ஆனந்த நினைவோடு நின்றேன் - நல்ல
அவல்போல அவள் நினைவை மென்றேன்.

கூடுசெல்லும் பறவைபல கூட்டமாகச் சென்றதனால்
குரல்கேட்டு உண்மைநிலை உணர்ந்தேன் - நானும்
வீடுசெல்லும் நினைவுபெற்று நகர்ந்தேன்.

மாலையொளி தீர்ந்துவிட மையிரவு தொடங்கிவிட
மாடியேறிச் சென்றேன்நான் மெல்ல - அங்கு
சேலையொடு யாரோதான் செல்ல

யாருமில்லா மாடியிலே என்வீடு தனிமையிலே
எவருமே வரமாட்டார் இரவில் - இன்று
உருவமில்லா அருவமொன்று அருகில்..!

திடுக்கிட்டு சட்டென்று திரும்பிநான் பார்க்கயிலே
தென்பட்ட உருவமதைக் காணோம் - திகில்
ஒடுக்கிட்டு என்னுயிரை மேலும்

விளக்கிட்டு நன்றாக வெளிச்சத்தில் பார்த்தாலும்
விளங்கவில்லை உருவமது யாரென்று - மனம்
விளக்கிற்று பயத்தோடு பேயென்று

'திக்'கென்ற அந்திகழ்ச்சி தேவதையை மறகசுடித்து
தின்றுவிட்டு போனகதை நினைத்தால் - உடல்
'பக்'கென்று வேர்த்துவிடும் பயத்தால்..!







"ஏன்டா லேட்டு?"

"பஸ்ல கொஞ்சம் அசந்து தூங்கிட்டேன் சார்..."

"ஆபீஸுக்கு வர்றதுக்குள்ள அப்படி இன்னா அவசரம்!"

- ஜெ.பி.சண்முகம், எழும்

# அப்படி என்ன அவசரம்?!



"இறுதி அஞ்சலி செலுத்தப் போன இடத்துல தலைவர் இப்படியா நடந்துக்கிறது?"

"ஏன் என்னாச்சு?"

"நம்ம கட்சிக்கு ஒரு வோட்டு அநியாயமாப் போச்சேன்னு அழுவுறாரு."

- பி.பாலாஜி கணேஷ், கோவிலம்பூண்டி

'நம் தலைவர் அன்றே
சொன்னார்
கடல் நீர் இனிக்குமென்று!
இன்று கடல் நீரைக் குடித்து
'அமுதம், அமுதம்' என்று
சொல்லக் கற்றுக்கொண்டோம்
- ஆதாம் வாஷ்க்



● இந்திரா ப்ரியதர்ஷினி

# புத்தகங்களைக்

சமூகம்

**நா**ன் போலந்து வார்ஸாவில் பணியாற்றச் சென்றபோது (1981) அங்கு ராணுவ ஆட்சி..

கம்யூனிஸ்ட் தலைவர் ஜெனரல் யெருஜெல்ஸ்கி, நாட்டின் அதிபராக இருந்தார். ஒரு காலத்தில், இரண்டாம் உலகப் போரின்போது, ஹிட்லரின் சைன்யத்துடன் தீவிரமாகப் போராடி, மக்கள் அபிமானத்தைப் பெற்றிருந்த யெருஜெல்ஸ்கி, போருக்குப் பின் சோவியத் யூனியனின் கைப் பொம்மையாகி, ராணுவ ஆட்சியைக் கொண்டு வந்தது, போலிஷ் மக்களுக்குப் பிடிக்கவில்லை; எதிர்த்தார்கள். ஆனால், வன்முறை இல்லை. நாகரிகமான எதிர்ப்பு. இரவு 12 மணிக்கு எல்லா வீடுகளிலும் மெழுகுவர்த்தி ஏற்றி ஜன்னல்களில் வைப்பார்கள். அநேகமாக வார்ஸா முழுவதும் பெரும்பான்மையான வீடுகளில், மெழுகுவர்த்தி எரிந்து கொண்டிருக்கும். சிறுபான்மையினர்தாம் அரசாங்கத்தை ஆதரித்தார்கள் என்பது இதனால் புரியும்.

ஒரு மிகப் பிரபலமான எழுத்தாளர், ராணுவ ஆட்சியை ஆதரித்துத் தொலைக்காட்சியில் பேசியது, ஒரு நாள் இரவு ஒளி பரப்பாகியது. அடுத்த நாள் காலை, அந்த எழுத்தாளர் தம் வீட்டு வாசற்கதவைத் திறந்ததும் திடுக்கிட்டார். அவர் எழுதிய புத்தகங்கள் அனைத்தும் வாசலில் குவியலாகக் கிடந்தன. அரசாங்கத்தை ஆதரித்து அவர் பேசியது பிடிக்காமல், எண்ணற்ற வாசகர்கள் அவர் எழுதியிருந்த நூல்களை, மூட்டை மூட்டையாக அவர் வீட்டு வாசலிலேயே எறிந்து விட்டுப் போயிருந்தார்கள்! வார்ஸா பல்கலைக் கழக 'டாய்லெட்'டுகளிலும் அவருடைய புத்தகங்கள் கிடந்தன. 'டாய்லெட் பேப்பரு'க்குப் பதிலாக அந்தப் புத்தகத் தாளைப் பயன்படுத்தலாமென்று அர்த்தம்!

**இ**தைத் தவிர, ஒரு புது வகையான நூதனப் போராட்டமும் நிகழ்ந்தது. இதற்கு "internal immigration' என்று பெயர். ராணுவ ஆட்சி, இன்னது தான் எழுதலாம், இன்னதுதான் எழுதக் கூடாது என்று ஆணையிடலாமேயன்றி, ஓர் எழுத்தாளனை, எழுதித்தான் ஆகவேண்டுமென்று கட்டாயப்படுத்த

## இளமைப் பாலம் 5

# கொளுத்திய மக்கள்!

**இந்திரா பார்த்தசாரதி**



● டால்ஸ்டாய்

முடியாது. ஓவியர்களைப் படங்கள் வரைந்தாக வேண்டுமென்று வற்புறுத்த இயலாது. நாடகக் கலைஞரை நாடகம் நிகழ்த்தியாக வேண்டும் என்று சொல்வது கடினம். ஆகவே பிரபல கலைஞர்கள், தம்முடைய ஆற்றலைத் தமக்குள் ஒடுக்கிக் கொண்டு, அவர் தேர்ச்சிப் பெற்றிருந்த கலைகளைப் பயிலாமல், சம்பந்தமே இல்லாத வேலைகளைச் செய்து வந்தார்கள். இது ஒரு வகையான எதிர்ப்பு. பிரபல ஓவியர்கள் முடி வெட்டினார்கள். சிறந்த கவிஞர்கள் மாமிசக் கடைகளில் வேலை செய்தார்கள். இதற்குத்தான் 'Internal immigration' என்று பெயர்.

போலிஷ் கலைஞர்களின் இந்த எதிர்ப்பு, போலிஷ் அரசாங்கத்தை, தார்மீக மனச் சங்கடத்துக்கு உள்ளாக்கியது. 'அரசாங்கம் இக்கலைஞர்களை இப்பணிகளைச் செய்யும்படிக் கூறவில்லை. போலிஷ் மக்கள் மீது உண்மையான அபிமானம் இருந்தால், கலைஞர்கள் மறுபடியும் அவர்களுக்கு இயல்பான கலைப் பணிகளைத் தொடர வேண்டும்' என்பது போன்ற தன்னிலை விளக்கங்களைத் தொலைக்காட்சியில் அரசு அதிகாரிகள் அளித்தார்கள். இது எனக்கு ஆச்சர்யத்தைத் தந்தது. அடையாளப் போராட்டங்களைக் கண்டு அரசு கவலைப்படுவது எனக்கு ஒரு புதிய அநுபவம்.

இந்தியாவில் இது சாத்தியமா என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன். இந்திரா காந்தி 'இடைக்கால நெருக்கடி நிலைமை'யை 1975-ல் அறிவித்து, அரசியல் சாசனத்தை ரத்து செய்து, பேச்சு, எழுத்து சுதந்திரத்துக்குத் தடை விதித்தபோது, லக்னோவில் ஒரு பிரபல ஹிந்தி கவிஞர், கவிதை எழுதுவதை நிறுத்திவிட்டு, வெற்றிலைப் பாக்குக் கடை வைத்ததோடு மட்டுமல்லாமல், 'இனி இந்த ஆட்சியில் ஒரு நேர்மையான கவிஞனாக வாழ முடியாது' என்று அறிக்கையும் விட்டார். அது எந்தவிதமான சலனத்தையும் ஏற்படுத்தியதாகத்



தெரியவில்லை..பத்திரிகைகளில் ஒரு செய்தித் துணுக்காக வந்தது தான் மிச்சம்.

இந்திராவின் சர்வாதிகாரத்தை ஆதரித்து அச்சமயத்தில் தொலைக் காட்சியில், பிரபல இந்திய எழுத் தாளர்கள் சிலர் (தமிழ் எழுத்தாளர் கள் உள்பட) பேசினார்கள். இது வாசகர்களிடையே எந்தவிதமான பாதிப்பையும் ஏற்படுத்தியதாகத் தெரியவில்லை.




● லூயிஸ் ஃபிஷர்

எழுத்தாளர்கள் அரசியல் விமர்சனம் செய்து தான் ஆகவேண்டுமா என்ற கேள்வியை இது எழுப்புகிறது.

'அரசியல்' என்றால் என்ன என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். அரசியல் பிரக்ஞை வேறு, கட்சிச் சார்பு வேறு. இரண் டையும் போட்டு நாம் குழப்பிக் கொள்ளக் கூடாது. எழுத்தாளனுக்குக் கட்சிச் சார்பு தேவையில்லை. ஆனால் அரசியல் பிரக்ஞை நிச்சயமாக வேண்டும். மக்களும் அவனிட மிருந்து இதைத்தான் எதிர்பார்க்கிறார்கள். இல்லாவிட்டால், வார்ஸாவில் வாசகர்கள் அந்தக் குறிப்பிட்ட எழுத்தாளர் வீட்டு வாசலில், அவர் எழுதிய நூல்களை வீசி எறிந்து விட்டுப் போவதற்கு என்ன காரணம்?

'அரசாங்கத்தின் தவறுகளை விமர்சனம் செய்ய வேண்டிய நீங்களே, அவற்றை நியாயப் படுத்திப் பேசுகின்றீர்களே, உங்களிடமிருந்து நாங்கள் அறிவு பூர்வமான நியாயத்தையும், நேர்மையையும் எதிர்பார்க்க முடியுமா? நீங்கள் எழுதுபவை அனைத்தும் பொய்கள். நீங்கள் எங்களை ஏமாற்றி விட்ட தெய்வம்' என்று அவர்கள் அமைதியாக விமர்சனம் செய்வது போல, ஆசிரியர் எழுதிய புத்தகங்களை அவருக்கே திருப்பிக் கொடுத்து விட்டார்கள்.

தொல்காப்பியத்தில், 'செவியறிவுறூஉ' என்ற ஒரு துறை சொல்லப்படுகிறது. இதற்கு என்ன அர்த்தம்? ஆள்கின்றவன் தவறு செய் தால், அவன் செவி கைப்ப, அவனுக்கு நியா யத்தை எடுத்துச் சொல்ல வேண்டியது ஒரு புல வனுடைய கடமை. இதற்குச் 'செவியறிவுறூஉ' என்று பெயர். புறநானூற்றில் இதற்குச் சான்றாகச் சில பாடல்கள் வருகின்றன. குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைச் சாடி வெள்ளைக்குடி நாகனார் என்ற புலவர் பாடியிருக்கிறார்.

'இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானும் கெடும்' - குறள்

அரசன் தவறுகளை இடித்துச் சொல்ல அறிஞர்கள் தேவை. அவர்கள் யாருமில்லாமல், தான் கேட்க விரும்பினவற்றையே சொல்லும் துதி பாடிகளை உடைய பாதுகாப்பற்ற அரசன், பகைவர்கள், இல்லாமலேயே கெடுவான் என்கிறது குறள். 'பாதுகாப்பில்லாத' என்ற சொல்லாட்சியைக் கவனியுங்கள். எது பாதுகாவல்? யாருடைய பொறுப்பு இது?

நாட்டுத்தலைவன் கூறுவதையும், செய்வதையும் அறிஞர்கள் நேர்மையாக, அச்சமின்றி விமர்சனம் செய்வதே அத்தலைவனுக்குப் 'பாதுகாவல்.' அடிவருடிகளின் புகழுரைகள் அல்ல.

லூயிஸ் ஃபிஷர் என்ற பிரஸித்திப் பெற்ற அமெரிக்கப் பத்திரிகைக்காரர், "The Life and Death of Stalin' என்ற ஒரு நூல், ஸ்டாலின் இருந்தபோதே எழுதினார். அதில் எழுதுகிறார்: 'ஸ்டாலின் பெரிய படிப்பாளி. புத்தகங்கள் படித்துக் கொண்டே இருப்பார். அப்புத்தகங்கள் அனைத்தும், அவருடைய அடி வருடிகளால் எழுதப்பட்ட அவருடைய வாழ்க்கை வரலாறு'.

ரஷ்ய மன்னன் நிக்கொலஸைப் பற்றி டால்ஸ்டாய் அவருடைய மிக முக்கியமான நாவலாகிய, 'ஹட்ஜி மூரத்'தில் எழுதுகிறார்: ' நிக்கொலஸ் தினந்தோறும் தன் துதி பாடுவதற்கென்றே, தன்னைச் சுற்றிக் கூலிக்கு மாரடிக்கும் 'அறிவாளி'களை வைத்துக் கொண்டான்.அவன் என்ன செய்தாலும், அது தன்னலம் பற்றியதாக இருந்தாலும், நாட்டு நலம் பற்றியது என்று அவர்கள் ஓயாமல் சொல்லிக் கொண்டு வந்தார்கள். அவன் துரதிர்ஷ்டம் என்ன தெரியுமா? அவர்கள் சொல்வதை அவன் நம்பத் தொடங்கியதுதான்..'

பகைவர்கள் இல்லாமலேயே ஒரு அரசன் எப்படிக் கெட முடியுமென்பது இப்பொழுது புரிகிறதா?

வள்ளுவர் இன்னொன்றும் சொல்லுகிறார்.

'வில்லேருழவர் பகைக் கொளினும் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை.'

நாட்டுத்தலைவன், வில்லை ஏராகக் கொண்ட வீரர்களின் பகையைக் கொண்டாலும் பரவாயில்லை. ஆனால், அவன் செய்கின்ற அக்கிரமங்களை எடுத்துக் கூறுவதற்கான கடமையும்



● ஸ்டாலின்

உரிமையும் உடைய, சொல்லை ஆயுதமாகக் கொண்ட படைப்பாளிகளின் சினத்துக்கு, அவன் இலக்கானால், அதுவே அவனுக்குப் பெரிய ஆபத்தாக முடியும். இதைத்தான் ஆங்கிலத்தில், "The pen is mightier than the sword' என்பார்கள்

வள்ளுவரையும், தொல்காப்பியரையும் மேற்கோள் காட்டிப் பெருமூச்சு விட்டுக்கொண்டு 'வீணாகப் பழங்கதைகள் பேசிக் கொண்டிருப்பதில்' என்ன பயன், இன்று என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று நீங்கள் கேட்கலாம்.

இக்கேள்வியே, என்னருமை இளைஞர்களே, அறிவுப் புரட்சிக்கு அடிக்கல். சமுதாய மாற்றம் உங்கள் பொறுப்பு.

*(அடுத்த வாரம்: கற்பு)*

# பலிச்சா சூன்யம்... இல்லேன்னா சூயிங்கம்!

மக்கள் பேட்டி

''டேய்... என்னை அவமானப்படுத்திட்ட இல்லே. உன்னை சூன்யம் வெச்சி சுருட்டுறேன்டா.''

''சிரிக்கி மவ... எம் புருஷனுக்கு வசியம் வெச்சி மடக்கிட்டாளே.''

''சார்! எனக்கு யாரோ ஏவல் வேலை செஞ்சிருப் பாங்களோன்னு சந்தேகமாயிருக்கு.''

இப்படிப் பல குரல்களை, நமது வாழ்நாளில் ஏதேனும் ஒரு சந்தர்ப்பத்தில் கேட்டிருப்போம். பணம் கொடுத்து ஜெயிக்கற கட்சிக்காரங்களே சர்வே எடுத்து சந்தோசப்பட் டுக்கிற காலத்துல பில்லி, சூன்யம், ஏவல் பற்றிய திகில் குறித்தான மக்கள் பதிவுக்குத் தயாரானோம்... அதில் சில பார்வைக்கு...

'பில்லியாவது, சூனியமாவது... அத்தனையும் சுத்த பீலா. அறிவியல் முன்னேற்றம் என்பது கிடுகிடுன்னு முன் னேறிக்கிட்டு இருக்குற இந்தக் காலத்துல இதப் பத்தி நினைக்கவோ, பேசவோ மக்களுக்கு ஏது நேரம். நான் பில்லி வைக்கறேன், சூனியம் வைக்கறேன்னு சொல்லிப் பணம் பிடுங்கும் வித்தை வேணா எங்கேயாவது நடந்துக் கிட்டு இருக்கும். இப்படிப் பணம் பிடுங்குவது, ஒரு டெக்னிக்... அவ்வளவு தான்' என பெட்ரோல் பங்க் மேலா ளர் வேணுகோபால். 'அதெல்லாம் கிடையவே கிடை யாதுங்க. பில்லி, சூனியம் இதெல்லாம் நெசமாலுமே இன்னும் இருக்குது . அதநான் கண் கூடா என் கிராமத் துலேயே கண்டு கிட்டு இருக்கேன். எத்தனையோ பேருக்கு, கால், கை ஏன் சமயத்துல மூளை கூடச் சரியா வேலை செய்யாம போவறதுக்கு காரணம் யாரோ வெச்ச சூனியம் தான்னு எங்க ஆயா அடிக்கடி சொல்லும். அது சரிதான் ' என்கிறார் அந்த பெட்ரோல் பங்க்கில் வேலை பார்க்கும் குபேந்திரன்.

'ஒரு மனிதனைத் தொடர்ந்து ஏளனம் செய்து, அவன் முன்னேற்றத்தைத் தடுக்கத் தங்களால் முடிந்த அத்தனையை யும் செய்து விட்டு...ப் பிறகு அவன் ஏதோ பிரமை மற்றும் பித்து பிடித்தவன் போல ஆன நிலையை மற்றவர்கள் பயன் படுத்திகொண்டு, பில்லி, சூனியம், காத்து, கருப்பு, சைத் தான் இவற்றால் அவன் பீடிக்க பட்டிருக்கிறான் என்று சொல்வதுதான் வாடிக்கையாக நடக்கிறது. நம் சமூகத்தில், பாதித்த உடனே, மந்திரவாதியிடம் போ, தாயத்து கட்டி கொள், என மூளைச் சலவை செய்யப் படுகிறான்'' ஒரே போடாகப் போடுகிறார் குடும்பத்தலைவி வேங்கட லட்சுமி.

‘இன்னாம்மா இது, இப்புடி சொல்லிப்புட்ட! நான் கண்ணாலேயே எத்தனையோ குடும்பங்கள் சீரழிஞ்சு நிற்பதை பார்த்திருக்கேனே. அத்தினிக்கும் காரணம் இந்தப் பாழாப் போன சூன்யம்தான். உனக்கு யாரையாவது புடிக்கலியா, நேரா போய் சூன்யம் வை. அவளுக்குக் குழந்தையே பொறக்காம போயிடும்ன்னு என் காதுபடவே பேசியிருக்குற பொம்பளைங்கள பார்த்திருக்கேன். நல்லா இருக்கறவங்க திடீர்னு நோய்வாய்ப்பட்டு வாய் குளறி போறதுக்குக் காரணம் கூட அவங்க மேல யாரோ வைக்குற சூன்யம்தான்’ என்கிறார் அன்னலட்சுமி.

இதெல்லாம், நாவல்கள் மற்றும் சினிமாக்கள்ல மட்டும் தான்வரும். படிச்சிருக்கும் சிலர் சூன்யத்தை நம்பலாம். எங்களுக்கு அது வெறும் சூயிங்கம். பல்லி, சூயிங்கம் (Chewing Gum)க்கு வேணா பயப்படுவோம், பில்லிக்கெல்லாம் நோ சான்ஸ்.. எங்க காலேஜ்ல பேனாவிலிருந்து, செல்போன், லஞ்ச், ஸ்நாக்ஸ்ன்னு... சில சமயம் மாயமா மறைஞ்சு போயிடுது அதுக்கு வேணா இப்படி ஏதாவது காரணமன்னு இருக்கலாம் என்கிறார் நக்கலாக கமெண்ட் கொடுக்கிறார் காலேஜ் மாணவி ரஞ்சனி.

‘எல்லாமே மன நம்பிக்கை செய்யற வேலை தாங்க. சின்ன வயசுலேர்ந்தே தாங்கள் பார்க்குற உறவுகள் மற்றும் சமூகத்துல, பில்லி, சூனியம், வசியம், காத்து, கருப்பு இப்படின்னெல்லாம் பேசுறத கவனிச்சிக்கிட்டு வளர்ற ஒரு குழந்தை, வளர்ந்த பிறகு அதே சிந்தனையில் இருக்கும். தனக்கு ஏதாவது ஒரு சிறு விபத்து நடந்தால்கூட, அதற்குக் காரணம், யாரோ தனக்கு சூனியம் வைத்து விட்டார்கள் என நம்பத் தொடங்கி விடும். அதேப் போல இந்த நபரிடம் சென்றால், தம்மைப் பிடித்துள்ள சூனியம் போய் விடும் என நம்பிக்கொண்டு யாரிடமாவது செல்வார்கள். அதுவும் நம்பிக்கைதான். நாம் பாஸிட்டிவ்வாக எப்பொழுதுமே நினைத்துக் கொண்டிருந்தால் நமக்கு இந்த பில்லி, சூனியம் போன்றவைகளைப் பற்றிய நினைப்பு வராது’ என்று சொல்கிறார் மனோதத்துவ நிபுணர் டாக்டர் எஸ்.உஷா ராணி.

பேட்டி, படங்கள்: **நளினி சம்பத்குமார்**



● வேணுகோபால்



● உஷாராணி



● ரூபேந்திரன்



● வேங்கடலட்சுமி



ரஞ்சனி



# கண்ணியமாக வாழ விடுங்கள்!?

"மத்திய-மாநில அரசாங்கங்கள் நிஜத்தை ஒதுக்கிவிட்டு நிழலுடன் போராடுகின்றன" என்கிறார் தமிழ்நாடு மக்கள் சிவில் உரிமைக் கழகத் தலைவர் (PUCL) டாக்டர் சுரேஷ். இவர் சொல்வது இந்தியாவில் பரவி வரும் மாவோயிஸ்ட்டு பிரச்னை பற்றிதான்.

இன்னமும் நூறு பின்தங்கிய மாவட்டங்களுக்கு மாவோயிஸ்ட் கலாசாரம் பரவும் அபாயத் தகவல் இருக்கிறது.

தற்போதைய தேர்தல் ஜனநாயகத்தில் சிறிதும் நம்பிக்கையற்ற மாவோயிஸ்ட்டுகள், நமது நாட்டில் மொத்தமுள்ள 630 மாவட்டங்களில் ஏற்கெனவே 240-ல் (20 மாநிலங்களில்) தங்களது ஆளுகையை நிலை நிறுத்திக்கொண்டிருக்கின்றனர்.

கிட்டத்தட்ட இருபது ஆயிரம் பேர் இந்த இயக்கத்தில் ஆயுதமேந்தி ஜனநாயகத்துக்குச் சவாலாக இருக்கின்றனர். இதில் எட்டாயிரம் பேர் பெண்கள். குறிப்பாக மே.வங்கம், ஜார்க்கண்ட், சட்டீஸ்கர், ஆந்திராவின் ஒரு பகுதி ஆகியவை மாவோயிஸ்ட்டுகளின் ஆதிக்க அழுத்தம் அதிகமாக உள்ள பகுதிகள். இவர்கள் நடத்தும் 'ஜனஅதாலத்' என்ற அமைப்புதான் பகுதி மக்களின் உச்சநீதிமன்றம். எந்தச் சட்டமன்ற, பாராளுமன்ற உறுப்பினர்களும், மாவோயிஸ்ட் அனுமதியின்றி, அந்தப் பகுதிகளுக்குச் செல்ல முடியாது. 1990-ம் வருடத்திலிருந்து, வருடத்துக்கு ஐந்நூறு பேரைக் கொன்று வருகிறார்கள். இவர்களது வருடாந்திர பட்ஜெட் இருநூறு கோடி ரூபாய்.

இதைச் சட்ட ஒழுங்குப் பிரச்னையாகப் பார்க்காமல், சமூக அறிவியல் பிரச்னையாகப் பார்க்க வேண்டும் என்கிறார்கள்.

மே.வங்க மாநிலம் நக்ஸல்பாரி கிராமத்தில் 1969-ல் ஆரம்பித்தது இந்த இயக்கம். உழுபவனுக்கு விளைச்சலில் இரண்டு பங்கு வேண்டும் என்ற முழக்கம்தான் மாவோயிஸ்ட்டுகளின் முதல் போராட்ட விதை. சாரு மஜூம்தார், கனுசன்யால், கொண்டப்பள்ளி சீதாராமய்யா... ஆகியோரால் முன்னெடுத்துச் செல்லப்பட்ட இந்த இயக்கம், முப்பது சிறு சிறு குழுக்களாகப் பிளந்து, இன்று CPI (மாவோயிஸ்ட்) என்ற பெயரில் ஒரே இயக்கமாக ராட்சஸத்தனமாகப் பயமுறுத்துகிறது.

"இரும்புத்தாது, பாக்ஸைட், செம்பு, வைரம் மற்றும் பல அரியக் கனிமங்கள், தாதுக்கள் கொட்டிக்கிடக்கும் பூமிதான் மத்




● டாக்டர் சுரேஷ்

திய பிரதேசம், ஜார்கண்ட், சட்டீஸ்கர் மற்றும் ஒரிஸ்ஸா மாநிலங்கள். இதைத் தவிர, இயற்கையின் வரமாகப் பசுமை குலுங்கும் இந்த மாநிலங்களில், நமது மத்திய அரசு இருநூறு பன்னாட்டு ஏகபோக நிறுவனங்களுடன், கனிமம் மற்றும் தாதுப்பொருட்களை வெட்டி எடுத்துக் கொண்டு போக புரிந்துணர்வு ஒப்பந்தங்கள் போட்டுள்ளது. இந்நிறுவனங்கள் கொள்ளை லாபம் அடிக்கின்றன. உதாரணம், ஒரு டன் இரும்புத்தாதுக்கு அரசுக்குக் கொடுக்கும் தொகை ரூபாய் முந்நூறு. ஆனால், இவர்கள் விற்பது ஆறாயிரம் ரூபாய். இப்படிக் கனிமங்களை எடுக்கும்போது, காடுகள் அழிக்கப்பட்டு ஆதிவாசிகளின் வாழ்வாதாரம் நசுக்கப்படுகிறது. சுற்றுச்சூழல் பாதிக்கப்படுகிறது. எனவேதான் உள்ளூர் மக்கள் போராடுகிறார்கள். இவர்களுக்கு உந்துசக்தியாகத்தான் மாவோயிஸ்ட்கள் இருக்கின்றனர். இப்பிரச்னை முடிவுக்கு வர வேண்டுமானால், இரண்டு தரப்பும் மோதல்களை நிறுத்த வேண்டும். நிபந்தனையற்ற பேச்சு வார்த்தைக்கு உடன்பட வேண்டும். கனிம வளங்கள் குறித்துப் போடப்பட்ட புரிந்துணர்வு ஒப்பந்தங்கள் குறித்து மக்களுக்குத் தெரியப்படுத்த வேண்டும்.

ஆயுதம் மூலம் அரசு பேசக்கூடாது. ஆதிவாசிகள் வசிக்கும் பகுதியில் ரேஷன் கடை, பள்ளிகள், மருத்துவ மனைகள் மட்டுமின்றி வேலை வாய்ப்பு வசதிகளையும் அதிக அளவில் துவக்க வேண்டும். மாவோயிஸ்ட்டுகளுக்கு எடுத்தவுடன் நேரடியாக வந்து பேசுவதற்குத் தயக்கம் இருந்தால், சமூகத்தின் மதிப்புள்ள நடுநிலையாளர்கள் மூலம் அரசுடன் பேச வேண்டும். ஜனநாயகப் பாதைக்கு வருவதற்கு ஏற்ற சிந்தனைகளை மாவோயிஸ்டுகள் வளர்த்துக் கொள்ள வேண்டும். ஆதிவாசிகள் கேட்பது, 'எங்களைக் கண்ணியமாக வாழ விடுங்கள்' என்பதுதான். அந்த வகையில் மத்திய - மாநில அரசுகளுக்கு ஜனநாயகக் கடமைகள் இருக்கின்றன'' என்கிறார் டாக்டர் சுரேஷ்.

மத்திய, மாநில அரசுகள் அரசியல் வேறுபாடுகளை மறந்துவிட்டு, ஒருங்கிணைந்து செயல்பட வேண்டிய நேரமிது. இல்லையேல், நம் காலுக்குக் கீழே தோண்டப்படும் குழியில், ஜனநாயகமும் சேர்த்துப் புதைக்கப்படும்.

**- ப்ரியன்**



# பிழை

**வெ**ட்டிப் பய! தண்டச்சோறு, கோவில் காளை என்றெல்லாம் வசவு வாங்கிய நான், பழைய கம்ப்யூட்டர் வாங்கி, எங்க ஊர் தாலுகா ஆபீஸுக்கு எதிரிலேயே இந்த சிறிய கடையைப் பிடித்து, மூன்றாவது வாரமே கடையைத் திறந்தேன்.

வேலை மிகவும் சுலபம். பெரும்பாலும் இந்த சிறுநகரத்துக்கு, அருகிலுள்ள கிராமப் பகுதி மக்கள்தான் வருவார்கள். இன்னது வேணும்னு மனு ரெடி பண்ணச் சொல்வார்கள். விஷயத்தைக் கேட்டுத் தெரிந்துகொண்டு, டைப் அடித்துத் தரவேண்டியதுதான் வேலை.

நல்ல வருமானம். முன்பு போல் அண்ணி கடுகடுவென்று பேசுவதில்லை. சில சமயங்களில் என்னிடம் 'ஜோக்'கூட அடிக்கிறாள். தங்கை என்னிடம், ''அண்ணா... மொபைல் பாலன்ஸ் தீந்துருச்சுடா...'' என்றவுடன் சந்தோஷமாக நூறு ரூபாய்க்கு டாப் அப் செய்து கொடுக்கிறேன். அனைவரையும் சினிமாவுக்கு அழைத்துச் செல்கிறேன்.

பாருங்கள். ஒரே ஒரு வேலை. எப்படி எல்லாவற்றையும் மாற்றிவிடுகிறது. இதுவரையிலும் இல்லாமலிருந்த கல்யாணக் கனவுகள்கூட இப்போது வர ஆரம்பித்தது.

அப்போதுதான் அவரைக் கவனித்தேன். எதிரிலிருந்த பஸ் நிறுத்தத்தில் அமர்ந்தபடி, அந்த நடுத்தர வயது நபர், என்னையே பார்த்துக்கொண்டிருந்தார். கண்ணாடி அணிந்திருந்தார். ஆளை எங்கேயோ பார்த்ததுபோல் தெரிந்தது. ஆனால், யார் என்றும் தெரியவில்லை. யோசனையுடன் கடைக்குத் திரும்பினேன். சட்டென்று நினைவுக்கு வரவில்லை.

வந்தவுடன், வேலை இருந்தது. எழுத்தாளர் ஒருவர், கதை டைப் அடிக்கக் கொடுத்திருந்தார். அவரின் புரியாத எழுத்துகளைப் பார்த்துப் பார்த்து அடித்து முடிப்பதற்குள் ஏழு மணி ஆகிவிட்டது. பிறகு கடையை மூடும்போதுதான் மறுபடியும் பார்த்தேன். அந்தக் கண்ணாடிக்காரர், இன்னும் பஸ் ஸ்டாப்பில்தான் உட்கார்ந்திருந்தார். என்னைப் பார்த்தவுடன் சற்று மரியாதையாக உட்கார்ந்துகொண்டார்.

# திருத்தம்

யாரிவர்? என்ற குழப்பத்துடன் வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தேன். பின்னால் ''தம்பி...'' என்று சத்தம் கேட்டுத் திரும்பினேன். அந்தக் கண்ணாடிக்காரர்தான். மிகவும் ஏழ்மையாகத் தெரிந்தார்.

''தம்பி... ஒரு உதவி செய்யணும்...''

''ஏதாச்சும் பணம்...'' என்று இழுத்தேன்.

''சேச்சே... என் வீடுவரைக்கும்... ஒரு நடை வந்துட்டுப் போகணும்...''

''நீங்க யாருன்னே முன்ன, பின்னத் தெரியாது. திடீர்னு வரச்சொன்னா எப்படி?''

''ஒரு அஞ்சு நிமிஷம் மட்டும் வீட்டுக்கு வந்துட்டுப் போகணும். கொஞ்சம் தயவு பண்ணுங்க தம்பி...'' என்று அவர் எதிர்பாராதவிதமாக சாலையிலேயே கையெடுத்துக் கும்பிட, எனக்குச் சங்கடமாகிவிட்டது.

''அய்யோ... என்னங்க... ரோட்டுல போய் கும்பிட்டுக்கிட்டு... வாங்க போகலாம். எங்க வீடு?''

''மேட்டுத்தெரு. ரொம்ப நன்றிங்க...'' என்றவர் மேற்கொண்டு ஒன்றும் பேசாமல், விறுவிறுவென்று முன்னால் நடக்க ஆரம்பித்தார். கடைத்தெரு முனையில் திரும்பும்போது, ''ஒரே ஒரு நிமிஷம் தம்பி...'' என்றவர், ரோட்டுக் கடையில் பத்து ரூபாய் கொடுத்து, பத்து இட்லி வாங்கிக்கொண்டார்.

மேட்டுத்தெருவில் சாக்கடையை ஒட்டி இருந்தது, அந்தக் குடிசை. உள்ளே ஒரு மண்ணெண்ணெய் விளக்கு மெலிதான வெளிச்சத்துடன் எரிந்துகொண்டிருந்தது. இற்றுப்போன கயிற்றுக் கட்டிலில், ஒரு வயதான பாட்டி படுத்திருந்தார். விளக்கைச் சுற்றி குறைந்த வெளிச்சத்தில், மூன்று பெண் குழந்தைகள் படித்துக்கொண்டிருந்தன. சரியான உணவின்றி மூன்றும் நோஞ்சான் போலிருந்தன.

ஒரு மண்சுவரைத் தடுத்து, சமையற்கட்டு போல் இருந்தது. அங்கிருந்து வெளியே வந்த பெண் ஆசைத்தம்பியின் மனைவியாக இருக்க வேண்டும். வெளுத்துப்போன சேலை அணிந்திருந்தாள். கழுத்தில், ஒற்றை மஞ்சள் கயிறைத் தவிர வேறொன்றுமில்லை.

ஆசைத்தம்பியைப் பார்த்தவுடன் குழந்தைகள் எழுந்தன. பெரிய பெண் போலத் தெரிந்தவள், ''கைல என்னப்பா?'' என்றாள். ''இட்லி கண்ணு...'' என்று ஆசைத்தம்பி கூறினார். அடுத்தவினாடி, நான் இதுவரையில் என் வாழ்க்கையிலேயே பார்த்திராத காட்சியைப் பார்த்தேன்.

மூன்று பெண் குழந்தைகளும் ஒரே சமயத்தில், ''எனக்கு இட்லி... எனக்கு இட்லி...'' என்று பாய்ந்தன. பெரிய பெண், வேகமாக அந்தப் பொட்டலத்தைப் பிரித்தாள். ஆசைத்தம்பியின் மனைவி, ''ஏய்..விடுங்கடி... இங்க தாங்கடி... நான் பிரிச்சுத் தரேன்...'' என்று கத்துவதை யாரும் பொருட்படுத்தவில்லை. மூன்று பேரும், ஒரே சமயத்தில், இலையில் கை வைத்தனர்.

''உக்கார்றதுக்கு சௌகரியமாக ஒண்ணும் இல்லங்க... வெளிய போய்ப் பேசலாம்...'' என்று அவர் கூறியவுடன் வெளியே வந்தேன்.

''என்னன்னவோ சொல்லணும்னு

ஜி.ஆர்.சுரேந்தர்நாத்

நினைச்சு அழைச்சுட்டு வந்தேன். என் புள்ளங்க அதுக்கு அவசியமே இல்லாம பண்ணிருச்சுங்க. மூணு மாசமா தினம், ரேஷன் அரிசி கஞ்சியே குடிச்சிட்டிருக்குங்க. அதான், இட்லியப் பாத்தவுடனே பாஞ்சுருச்சுங்க. கட்டில்ல கெடக்கறது எங்க அம்மாதான். அவங்களுக்கும் உடம்பு முடியல. கவர்மெண்ட் ஆஸ்பத்திரி மாத்திரைக்கு கேக்கல. வெளிய தனியா டாக்டர் கிட்ட காமிக்கலாம்னா கைல காசு இல்ல...''

''எங்க அண்ணன் டாக்டர்தான். அவன் கிட்ட அழைச்சுட்டு வந்து காமிங்க. நான் சொல்றேன். அப்புறம்... பணம் ஏதாச்சும்...'' என்று பாக்கெட்டில் கையை விட்டேன்.

''அய்யோ... பணம்ல்லாம் வேண்டாங்க.''

''அப்புறம்...?' என்று அவரை ஆச்சர்யத்துடன் நோக்கினேன்.

''நான் அந்தத் தாலுகா ஆபீஸ் உள்ள தான் மரத்தடில. உக்காந்து மனு எழுதிட்டிருப்பனுங்க...''

''ம்... ஞாபகம் வந்துருச்சு. அதான் எங்கயோ பார்த்த மாதிரி இருக்கேன்னு யோசிச்சுட்டிருந்தேன். ஒரு ரெண்டு, மூணு தடவைதான் உள்ள வந்துருப்பேன். அதான் டக்குன்னு ஞாபகத்துக்கு வரல...''

''நாங்க... ரெண்டு, மூணு பேரு இந்த வேலையை செஞ்சுகிட்டிருக்கோம் தம்பி. ஆளப் பொறுத்து, ஒரு மனுவுக்கு அஞ்சு ரூபா, பத்து ரூபான்னு வாங்குவோம். எப்படியும் ஒரு நாளைக்கு அம்பது, நூறுக்கு குறையாம சம்பாதிச்சுட்டிருந்தோம். இப்ப நீங்க வந்ததுலருந்து... ஒண்ணு, ரெண்டு பேரு வர்றதே பெரிய பாடாயிடுச்சு. இந்த மூணு மாசத்துல, குடும்பம் ரொம்ப மோசமாயிடுச்சு. இன்னிக்கிதான் ரொம்ப நாள் கழிச்சு, ஒரு பெரியவருக்கு மனு எழுதித் தந்தேன்... பத்து ரூபாய் கொடுத்தாரு. அதுலதான் பசங்களுக்கு இட்லி வாங்கிட்டு வந்தேன்.''

''கடவுளே...'' என்று மனதிற்குள் அதிர்ந்தேன். பெரிய பாவம் செய்துவிட்டது போல் இருந்தது. தொடர்ந்து ஆசைத்தம்பி, ''நீங்கதான் பாத்து... ஒண்ணு, ரெண்டு நாள் கடைக்கு வராம இருந்து, இல்ல... கம்ப்யூட்டர் ரிப்பேர் அப்படி இப்படின்னு, நாலு பேர எங்ககிட்ட அனுப்பினா, ஏதோ கால் வயிறாச்சும் நிறையும்'' என்று கூறி முடிக்க, என் கண்கள் கலங்கிவிட்டன.

சட்டைப் பாக்கெட்டிலிருந்த மொத்த பணத்தையும் எடுத்து, அப்படியே அவரிடம் கொடுத்தேன்.

''அய்யோ... பணம்ல்லாம் வேண்டாம் தம்பி.''

''பரவால்ல... வச்சுக்கங்க...'' என்று அவர் கையில் வலிந்து பணத்தைத் திணித்த நான், வேகமாகத் திரும்பி நடந் தேன். சமதரை நடைப்பையும் ஏதோ மலை யேற்றம்போல் திணறலாக உணர்ந்தேன். ○




''எனக்கு ரொம்ப வருஷமா ஒரு சந்தேகம்!''

''என்னடா...''

''கோவிச்சுக்காதே மாமு... எம்.என்.நம்பியாரும், எம்.என்.ராஜமும் அண்ணன் தங்கையா?'' - லீலாஜி



**கல்கி** வழங்கும்

# கோடைக்கால கொண்டாட்டம்!

6 வார ஆரவாரம்



இதழ்களில்...

| | | |
|---|---|---|
| 02.05.2010 | கூலா சாப்பிடுங்க | [உணவு] |
| 09.05.2010 | வெயிலோடு விளையாடி... | [சுற்றுலா] |
| 16.05.2010 | வாட்டாத வகுப்புகள் | [கோடை வகுப்புகள்] |
| 23.05.2010 | ஜில்லுன்னு ஜோரா... | [உடல் நலம்] |
| 30.05.2010 | சம்மர் செலக்ஷன் | [ஃபேஷன்] |
| 06.06.2010 | ஓடிப்போச்சுக் கோடை | [ஜில் ஜில் கலாட்டா] |

அடுத்த வாரம் முதல்...

ஆறு வாரம் படிங்க...
பம்பர் பரிசைப் பெறுங்க!

**வி**ப்ரப்ரியாவாக ஜீவர்களைக் கண்டு சந்தோஷம் அடைகிற ஸ்ரீ லலிதாம்பிகை விப்ரரூபாவாகவே இருக்கிறாள். அதாவது, அந்த ஜீவன்களின் வடிவமாகவும் அவளே இருக்கிறாள். இவர்களுடைய கல்வியின் ரூபமாகவும் அறிவின் ரூபமாகவும் அவள் இருக்கிறாள். இவ்வாறு சராசரியான விப்ரர்கள் - ஜீவன்களின் வடிவமாக இருப்பவளே **விச்வபிரமணகாரிணி** என்கிற திருநாமத்துக்கும் உரியவள். இந்த விச்வத்தையே சுழல வைக்கக்கூடியவள் என்று அர்த்தம். பிரமணம் என்றால் சுழலுதல் - சுற்றுதல். பிறப்பு - இறப்பு என்கிற சுழற்சியைச் செய்யக்கூடியவள் என்பதை ஏற்கெனவே பார்த்தோம். மற்றொரு சுழற்சி கோள்களினுடையது. கண்ணுக்குத் தெரியும் சூரிய மண்டலத்தின் கோள்கள், அதையும் தாண்டி விண்வெளியில் விரிந்து செல்லும் கணக்கற்ற மண்டலங்களின் எண்ணற்ற கோள்கள்..... அனைத்தின் சுழற்சிக்கும் யார் காரணம் என்றால், இந்த **விச்வ பிரமணகாரிணி**யான அம்பிகைதான் காரணம்.

யுகங்கள் மாறி மாறி வருகிற காலச் சுழற்சிக்கும் அவளே காரணம். நாகரிகம் மாறி மாறி அமைகின்ற சுழற்சிக்கும் அவளே காரணம். ''முப்பது வருடங்களுக்கு முந்தைய ஃபேஷன் இன்றைக்குத் திரும்பி வந்திருக்கிறது,'' என்கிறோமே, அதைக்கூட முன்னின்று நிகழ்த்துபவள் அம்பிகைதான்! 'யுகங்களெல்லாம் மாறி மாறிச் சுழலும்போது, முருகா - உன் அழகுக்கு மட்டும் மாறுதல் இல்லை'' என்கிற பொருள்பட ஒரு பாட்டு உண்டு. முருகனின் அழகுக்கு மட்டுமல்ல... அம்பாளின் ஆற்றலுக்கும் இது பொருந்தும். எல்லாவற்றையும் சுழல வைத்துக்கொண்டிருப்பவள், விச்வத்தையே சுழற்சியில் செலுத்திக்கொண்டிருப்பவள் அவள் - **விச்வபிரமணகாரிணி**.

## ஒரு பிடிக்குள் அடங்கும் உலகம்!

**வி**ச்வகிராஸா - விச்வத்தை அப்படியே பிடித்துக்கொண்டிருப்பவள். முன்பு **மஹாகாளி, மஹாகிராஸா, மஹாஸனா** என்ற திருநாமங்கள் பார்த்தோம். **கிராஸ** என்றால் உறுதியாகப் பிடிப்பது. இந்த விச்வத்தையே அவள் பிடித்திருக்கிறாள் என்றால், அவள் சொன்னபடி இந்த விச்வம் கேட்கும். **மஹாகிராஸா** என்பதை இந்தத் திருநாமத்தோடு தொடர்புபடுத்திப் பார்த்தோமானால், விச்வத்தை மொத்தமாக ஒரு பிடியில் அடக்கிவைத்திருக்கிறாள் என்ற பொருள் வரும். **மஹாஸனா** - என்பதைத் தொடர்புபடுத்திப் பார்த்தால், ஒரு கவளம் மாதிரி விச்வத்தை உண்டுவிடக் கூடியவள் என்று அர்த்தம் வரும்! விச்வத்தைப் படைக்கக்கூடிய அவள், தான் விரும்பும் நேரத்தில் அதைத் தனக்குள்ளேயே ஒடுக்கிக்கொள்ளவும் செய்கிறாள். அதனால் தான், அம்பாளுடைய வயிற்றில் ஈரேழு பதினாலு லோகங்களும் இருப்பதாகச் சொல்வது. ஆசார்யர் பாடுவார் - ''அம்மா, உனக்கு அப்பாவாக இருக்கக்கூடிய ஹிமவான் ஒரு விஷயத்தை நன்றாகக் கற்றுக் கொடுத்திருக்கிறார்...'' என்பார்.

**ஹி**மவான் பெரிய மலை அல்லவா? மலையில் கனிமங்கள் இருக்கும். ஆங்காங்கே ச

# ஹிமவான் தந்த ஸ்ரீதனம்!

26

ஸ்ரீ லலிதா

நான்காம் பாகம்

சுதா சேஷய்யன்

வுகள், பள்ளத்தாக்குகள் இருக்கும். கான கம், குகை இருக்கும். அவற்றில் வாழும் விலங்குகள் இருக்கும். இவை அத்தனையும் இருப்பதனாலேதான் மனிதனால் வாழ முடிகிறது. ''கோவர்த்தன கிரி - இருப்பதனாலேதான் அப்பா நாம் இங்கே நிம்மதியாக வாழ முடிகிறது?'' என்று கிருஷ்ணர் எடுத்துச்சொன்னார். ''அதனால் நாம் இந்திர விழா எடுக்க வேண்டாம்; கோவர்த்தன கிரிக்கு விழா நடத்துவோம்'' என்று நந்த கோபருடன் வாதாடினார் கிருஷ்ணர்! மலை இருப்பதனால்தான் வாழ்வு!

அதனால்தான் ஆசார்யர் சொல்கிறார்- ''ஹிமவான்-என்ற மலையினுடைய மகளாகப் பிறந்ததால், உன் அப்பா உன் கல்யாண சமயத்தில், தன்னுடைய விஸ்தாரமான குணத்தையும் உனக்கு ஸ்ரீதனமாகக் கொடுத்தானே அம்மா!'' என்கிறார் அம்பிகையிடம்! ''அதனால்தானே அம்மா எங்களையெல்லாம் உனக்குள்ளே தாங்கி, காத்துக் கொண்டிருக்கிறாய்!'' என்கிறார்.

இப்படி **விச்வகிராஸாவாக** விச்வத்தைப் பிடித்துத் தனக்குள்ளேயே ஒடுக்கிக் கொள்ளக்கூடியவள் அம்பிகை.

## சிறிதும் அவளே, பெரிதும் அவளே!

**வித்ருமாபா** - வித்ரு என்றால் பவழம். வித்ருமலதா என்றால் பவழக் கொடி. **வித்ருமாபா** - பவழமாக ஒளிர்பவள். விச்வத்தையே தன்னுள் அடக்கிக் கொள்ளக் கூடியவள் **விச்வகிராஸா** - மிகப் பெரியவள். பவழமோ மிகச் சிறியது. அந்தச் சிறிய அளவினதான, வித்ரும ஸ்வரூபமாகவும் இருக்கக்கூடியவள் அம்பிகை. ஒரேசமயத்தில், மஹிமாவாகவும் (பெரியது) அணிமாவாகவும் (நுண்ணியது) இருக்கிறாள்.

**வைஷ்ணவி** - விஷ்ணுவின் ஆற்றலாக இருப்பவள். விஷ்ணு ரூபமாகவே விஷ்ணு ரூபிணியாகவே இருப்பவள்.



**அயோனிர் யோனி நிலையா** - இந்தத் திருநாமத்தை இரண்டாகப் பிரித்துக் கொள்ளலாம். **அயோனிர்** என்றால் அயோனிஜையாகத் தோன்றியவள் - எந்த யோனியிலேயும் எந்தத் தாயின் வயிற்றிலேயும் தனியாகப் பிறக்காதவள். இப்படி விசேஷமாகத் தோன்றியவர்களுக்கு அயோனிஜர்கள் என்று பெயர். முதலாழ்வார்கள் மூவரும் அயோனிஜர்கள். அதேபோல், சீதை அயோனிஜை. ஆண்டாள் அயோனிஜையாகத் தோன்றியவள். வாலியின் மனைவி தாரை அயோனிஜையாவாள்.

**யோனிநிலையா** - அயோனிர் என்ற சிறப்பு உடைய அம்பிகை, அதே சமயத்தில் பிறப்புக்கு வழி சொல்லக்கூடிய **யோனி நிலையாவாக** எல்லா இடங்களிலும் இருக்கிறாள்.

## இருளைத் தந்து, நீக்குபவள்!

**கூடஸ்தா** - இந்தத் திருநாமமும் மிக அழகானது. கூடம் என்றால் என்ன அர்த்தம்? அஞ்ஞானம் என்று ஒரு பொருள் அதற்கு. 'அம்பாளைப் போய் அஞ்ஞானம், இருட்டு என்று சொல்லலாமா?' என்றால், அந்த அஞ்ஞானத்தை எல்லா உயிர்களுக்கும் தந்து, மாயையைத் தந்து, அந்த அஞ்ஞான ஸ்வரூபமாக அவளே இருக்கிறாள். இது எங்கே தெரிகிறது என்றால், 'யாதேவி ஸர்வ பூ'தேஷு'/ கிராந்தி ரூபேண ஸம்ஸ்திதா' என்ற வாக்கியத்தில் (சுலோகத்தில்) தெரிகிறது. எல்லா உயிர்களுக்கும் அஞ்ஞானத்தை, மயக்கத்தை, இருட்டைத் தரக்கூடியவள். (பிற்பாடு அதைப் போக்க வல்லவளும் அவளே!)

கூடம் என்றால் இன்னொரு அர்த்தம் கூட்டம். நிறையப் பேர் குழுமியிருக்கிற சங்கம். தன்னுடைய பக்தர்களின் கூட்டம் சூழ இருக்கக்கூடியவள் **கூடஸ்தா**. மலைச் சிகரங்களுக்கும் கூடம் என்று பெயர். மேரு என்கிற சிகரத்தில் இருப்பதால் மட்டுமல்ல, ஹிமவானின் மகளாக - சைலேந்திர தனயாவாக இருப்பதனாலும், அவளுக்குக் **கூடஸ்தா** என்கிற திருநாமம்.

கூடம் என்ற வார்த்தைக்கு, புறத் துவாரம் என்றும் பொருள் உண்டு. த்ரிகோணத்தின் நடுவில் இருக்கக்கூடிய துவாரம்தான் ஸ்ரீ சக்கரம் என்று கணக்கு உண்டு.

ஸ்ரீபுரம் இருக்கிறதே - அது திரிகோணத்தின் மத்தியில் இருக்கக்கூடிய துவாரம். அப்படித் திரிகோண துவாரமாக இருக்கக்கூடிய இடத்தில், வாஸம் செய்பவள் என்பதாலும் **கூடஸ்தா** என்ற திருநாமம். ஆகக்கூடி, ஒரே திருநாமத்துக்கு ஒரு முனையிலிருந்து நேர் எதிர் முனை வரையிலான பல பொருள் வருகிறது. அம்பாளுடைய நாமங்களின் தனிச் சிறப்பு இது.

**குலரூபிணி** - குலம் என்றால் கௌலாசார முறை சார்ந்தது என்று அர்த்தம். வம்சம் என்றும் பொருள் உண்டு. மூலாதாரம் - குண்டலினி - எங்கே இருக்கிறதோ, அதற்கும் குலம் என்று பெயர். அப்படி குல ரூபமாக, குல ரூபிணியாக, வம்சத்தில் நிலை கொண்டிருப்பவளாக, மூலாதாரத்தில் குண்டலினி சக்தி வடிவாக நிலை கொண்டிருக்கக்கூடியவள் **குலரூபிணி**. கௌலாசார மார்க்கத்தின்படி யாரெல்லாம் வழிபடுகிறார்களோ, அவர்களுக்கு எல்லாம் **குலரூபிணி**யாகத் திகழ்பவள்.

**அயோனிர் என்றால் எந்தத் தாயின் வயிற்றிலேயும் பிறக்காதவள். சீதை அயோனிஜை.**

**வீரகோஷ்டிப்ரியா** அம்பாளை யாரெல்லாம் வழிபடுகிறார்களோ, அவர்களெல்லோருக்குமே வீரர்கள் என்று பெயர். அத்தகைய வீரர்கள் கோஷ்டியைக் கண்டு மகிழ்பவள் அம்பாள்.

**வீரா**-அவளே வீரையாக இருப்பவள்.

**நைஷ்கர்ம்யா** - எந்தவிதமான சஞ்சலமும் இல்லாமல் பணியாற்றக்கூடியவள்.

**நாதரூபிணி** - நாதத்தினுடைய ஸ்வரூபமாக இருப்பவள்.

**விஞ்ஞானகலனா** - விசேஷமான அறிவைத் தரக்கூடியவள் விஞ்-ஞானம்- விசேஷமான ஞானம். பிரம்மத்தைப் பற்றிய விசேஷமான ஞானத்தைத் தரக்கூடியவள் ஸ்ரீ லலிதாம்பிகை.

**(வளரும்)**

காலாவதியான மருந்துக்கு மூன்று வயதுக் குழந்தை கீர்த்தி தேவதர்ஷினி பலியானது மட்டும்தான் நமக்குத் தெரியும். இன்னும் எத்தனை பேரோ? நெஞ்சு திக், திக் என்கிறது. இவற்றை எல்லாம் ஜுஜுபியாக்குகிறது மருத்துவ உலகின் இன்னொரு திக் திக் திடுக் நிகழ்ச்சி.

# நோயினும் கொடிய நிவாரணங்கள்

**ஹா**ர்மோன்கள் என்பவை உடலில் உள்ள அங்கங்கள் சுரக்கும் நீர். ஆண் பெண் உடல் அமைப்புகளில், வேறுபாடுகள் ஏற்படக் காரணம் ஹார்மோன்கள். டெஸ்டட்ரோன் (Testetrone) ஹார்மோன் ஆண் தன்மையைத் தருகிறது. இதைப்போல் ஈஸ்ட்ரோஜன் (Estrogen) பெண்கள் பருவம் எய்துதல், மாதவிடாய், கர்ப்பம், மகப்பேறு ஆகியவற்றை நிர்வகிக்கிறது.

உலகின் புகழ்பெற்ற மருந்துக் கம்பெனி வையத் (Wyeth). *1943*-இல் ப்ரீமாரின் (Premarin) என்ற மாத்திரையை அறிமுகம் செய்தார்கள். பெண்களின் உடலில் ஈஸ்ட்ரோஜன் கம்மியானால் நிவர்த்தி செய்யும் மருந்து இது.

*1972* - இல் ராபர்ட் வில்சன் என்ற டாக்டர் ஃபெமினைன் ஃபார் எவர் (Feminine Forever) என்ற புத்தகம் எழுதினார். பெண்கள் தங்கள் பெண்மையைப் பாதுகாக்க, ஈஸ்ட்ரோஜன் மாத்திரைகளைத் தொடர்ந்து சாப்பிட வேண்டும் என்பது அவருடைய மையக் கருத்து.

அமெரிக்காவின் முதியோர் நோய்கள் பற்றி அறியும் சொசைட்டியின் இதழில் (Journal of the American Geriatric Society) வில்சன் கட்டுரை எழுதினார். அதன் சுருக்கம் இதுதான்:

ஐம்பது வயதில் பெண்கள் உடலில் பல மாற்றங்கள் ஏற்படும். மார்பகங்கள், பெண் உறுப்புகள் ஆகியவை சுருங்கும். ஈஸ்ட்ரோஜன் இந்த விரும்பத்தகாத மாறுதல்களிலிருந்து பெண்களைப் பாதுகாக்கும்.

புத்தக விற்பனை சிகரம் தொட்டது. டாக்டர்கள் அமைப்பு, பெண்கள் குழுக்கள் ஆகிய இயக்கங்கள், தங்கள் மன்றங்களில் வந்து பேசுமாறு வில்சனுக்கு வெற்றிலை பாக்கு வைத்தன. *1981*-இல் மரணம் அடைவதுவரை, அவர் செம பிஸி. சொற்பொழிவுகள் மூலமாக எக்கச்சக்கப் பணமும் புகழும் குவித்தார்.

வில்சனின் பேச்சுக்களை டாக்டர்களும் மக்களும் வேதவாக்காக நம்பினார்கள். ஈஸ்ட்ரோஜன் பெண்மைக்குத் தேவை, ஈஸ்ட்ரோஜனை உடலுக்குத் தர ப்ரீமாரின் தேவை. வையத் கம்பெனியின் வியாபாரம் எகிறியது.

*1980*. ப்ரீமாரின் வளர்ச்சியில் ஒரு முக்கிய, முன்னேற்றத் திருப்பம்.

பெண்களுக்கு இதனால் பாதிப்பு அதிகம். மாதவிடாய் நிறுத்தத்திற்குப் பிறகு, அவர்கள் உடலில் ஈஸ்ட்ரோஜன் குறைவதால், சிறு காயம்கூட எலும்பு முறிவை ஏற்படுத்தக்கூடும்.

எலும்பு முறிவு நோய்க்கு ப்ரீமாரின் மருந்து என்று வையத் கம்பெனி அறிவித்தார்கள். ஏராளம் பெண்கள் ப்ரீமாரின் உபயோகித்தார்கள். *2000*-த்தில் உலகம் முழுக்கப் பத்து கோடிப் பெண்கள் ஈஸ்ட்ரோஜன் மாத்திரைகள் விழுங்கினார்கள். இதில் வையத் அள்ளியது சுமார் *106,000* கோடி ரூபாய்.

**அ**மெரிக்காவின் நேஷனல் இன்ஸ்டிடியூட் ஆஃப் ஹெல்த் என்கிற அரசு நிறுவனம், ஈஸ்ட்ரோஜன் மருந்துகள்

**எஸ்.எல்.வி.மூர்த்தி**



தொடர்பாக 16,000 பெண்களிடம் ஆராய்ச்சிகள் நடத்தியது. அப்போது வெடித்தது பூகம்பம்.

ஈஸ்ட்ரோஜன் சாப்பிடும் பெண்களுக்கு, அதைச் சாப்பிடாத பெண்களைவிட இதய நோய்கள், மார்பகப் புற்றுநோய், ஸ்ட்ரோக், மூளையில் இரத்தம் உறைதல் ஆகிய கோளாறுகள் வரும் வாய்ப்புக்கள் அதிகம் என்று இந்த ஆய்வு சொன்னது.




புகழ்பெற்ற வையத் கம்பெனி எப்படித் தவறு செய்தது என எல்லோரும் திகைத்தார்கள். அப்போது ராபர்ட் வில்சன் மகன் ரொனால்ட் வில்சன் ஊடகங்களுக்குத் தம் உள்ளத்தைத் திறந்தார். அவர் சொன்ன உண்மைகள், ஹிரோஷிமா, நாகசாகி அணு குண்டுகளைவிடச் சக்தி மிக்க சத்தியக் குண்டுகள்

ராபர்ட் வில்சன் புத்தகம் எழுத, வெளியிடப் பணம் கொடுத்தவர்கள் வையத். ஊர் ஊராக அவரைச் சொற்பொழிவுகளுக்கு அழைத்துத் தட்சணை கொடுத்தவர்கள். ப்ரீமாரின் மாத்திரையின் பலன்கள்பற்றிக் கட்டுரைகள் எழுத டாக்டர்களையும் அவற்றை வெளியிடப் பத்திரிகையாளர்களையும் 'கவனித்து'க் கொண்டவர்கள் வையத்.

தன் மருந்தால் பாதிக்கப்பட்ட பெண்களுக்கு வையத் 58 கோடி மில்லியன் டாலர் (சுமார் 2980 கோடி ரூபாய்) கொடுக்க வேண்டும் என அமெரிக்க நீதிமன்றம் ஆணையிட்டது.

இப்போது... மெர்க், GSK என்ற அமெரிக்க நிறுவனங்கள். கர்ப்பப் பை வாய் புற்றுநோய் (Cervical Cancer) க்குத் தடுப்பு மருந்து கண்டுபிடிக்கும் முயற்சியில், பரிசோதனைகளை இந்தியப் பெண்கள் மீது நடத்தி வருகிறது. பரிசோதனை முடியும் முன்பே, நமது மருந்து கட்டுப்பாட்டகம் உற்பத்தியை அனுமதித்தது. பெரும்பாலும் ஏழை எளிய பெண்கள் மீது சோதனை. இந்த விஷப் பரீட்சையில் பல்லாயிரம் பெண்களின் உடல்நலம் பாதிக்கப்பட்டுள்ளது. நான்கு பெண்கள் இறந்தபின், சமூக அமைப்புகள் விழித்துக் கொண்டன. அரசை வற்புறுத்தி இந்த ஆராய்ச்சிக்குத் தற்காலிகத் தடை விதிக்க நிர்ப்பந்தித்துள்ளன.

நோயைவிடக் கொடுமையான நிவாரணங்களை மருந்து உலகம் ஓயாமல் தேடுகிறது!

# கல்லு வெக்காமலே! கம்முனு போய்ச் சேர்ந்திடுவாங்க!







• சேட்டு

**தி**ருச்சி, காவிரிக் கரையில இருக்கு ஓயாமாரி சுடுகாடு. எல்லா ஊர்கள்லயும் பொதுவா, அந்தந்த ஏரியா பேரையொட்டி சுடுகாட்டோட பேரு அமைஞ்சிருக்கும். இந்தச் சுடு காட்டுக்கு மட்டும்தான் 'ஓயாமாரி'னு பேரு நெலைச்சுப் போச்சு. எந்த நேர மும், ஏதாவது ஒரு சடலம் இங்கன வந்து எரிஞ்சிக்கிட்டு இருக்கும். ஒரு 'பொணம்' கூட இந்தச் சுடுகாட்டுக்கு வந்து சேராத நாளே இல்லே. அத னாலதான் இதுக்குப் பேரு 'ஓயாமாரி!'

''எங்க பரம்பரையில இருநூறு வருஷமா தொடர்ந்து வர்ற தொழி லுங்க இது. எனக்கு அடுத்து எம் மவன் சேட்டு. புரோட்டா கடையில வேலை பார்க்குற புரோட்டா மாஸ்டருக்கு, புரோட்டா தின்னப் புடிக்காது. அதுபோல எங்களுக்கும் இந்தப் பொணங்களைப் பார்த்துப் பார்த்து, வாழ்றதே சலிச்சுப் போயிரும். சாவுக்கு அஞ்சறது இல்ல நாங்க!'' என்கிறார் இந்தச் சுடுகாட்டு ஊழியர் கே.ராமசாமி.

இந்தச் சுடுகாட்டுல மயானம் காத்த அரிச் சந்திரனுக்கு, சிலையெழுப்பிக் கோயில் கட்டியிருக் காங்க. தமிழ்நாட்ல வேறெங்கேயும் இல்லேன்னு சொல்றாங்க.

''ஒரு பொணத்தை எரிக்கனும்னா, வெராட்டி - காய்ஞ்ச வெறகு- எங்களுக்கு ஊத்திக்க சரக்கு இது மூணும் முக்கியம்ங்க. அது என்னமோத் தெரியலை. சரக்கு ஊத்துனாதான், சடசடன்னு வேலை ஆவுதுங்க. இல்லேன்னா பயம் வந்து பக்குன்னு கவ்விக்கும்.

என்னோட அப்பன் தாத்தன் பாட்டன் காலத் துல எரியிற பொணம், எந்திரிக்கும்னு கேள்விப்பட் டிருக்கேன். தடியால அடிச்சு படுக்க வெச்சு எரிப் போம்னு சொல்லியிருக்காங்க.

இப்ப, எங்க காலத்துல அப்படி இல்லே. எரியுற ஆசான் எந்திரிக்காம இருக்கனும்னு, நெஞ்சுல ரெண்டு கல்ல தூக்கி வெச்சிருவோம். வலது கை, இடதுகைப் பக்கத்துலயும், வலது கால் இடது கால் பக்கத்துலயும் அதுகளுக்கு அண்டையா பெரிய பெரிய கல்லுகளெத் தூக்கி வெச்சு அண்டை கட்டிடுவோம். அதனால, இப்ப எந்தப் பொணமும் எந்திரிக்க முடியறது இல்ல. போராட்ட மான வாழ்க்கையில இப்ப போனா போதும்னு இருக்கு. கல்லு வெக்காமலே கம்முனு போய்ச் சேர்ந்திடுவாங்கன்னு தோணுது.

அஞ்சு மணிக்கு சுடுகாட்ல போயி, எரிஞ்சு சாம்பலாகி, எலும்பு மட்டும் மண் கலையத்துல எடுத்து வெக்கிறாப்ல மிச்சம் இருக்கும். ஒவ்வொரு தடவையும், இந்த மிச்சத்துக்காடா இந்த ஆட்டம்னு என் நெஞ்சை உலுக்கும்!'' என்கிறார் இடுகாட்டு ஊழியர் சேட்டு. அதுவும் சரிதானே!

**- சரவணன் திரு.**

**ஜாலிஸ்டோர்ஸ்**



# 'திக் திக்' திவாகர்

'**கோ**லாம்பஸ், கோலாம்பஸ் விட்டாச்சு லீவு. பிகர் இல்லா ரோடெல்லாம் எரிமலைத் தீவு'ன்னு பாடாத கொறையா கருப்பாயிக் கூட வெயில்ல கருத்துருவோம்னு வீட்டுக் குள்ளேயிருந்து காண்டு ஒத்துறக் காலம் இது. ஒவ்வொரு நாளும் ஒரு இடம் சுத்தி, கொளுத்துற வெயிலைக் கொண்டாடலாம்னு முடிவு பண்ணோம். நாளைக்கு வண்டலூர் போலாம்னு மொக்க முனுசாமி (பேசியே அறுப்பான்), டுபாக்கூர் சந்திரன் (வாயத் திறந்தாலே பொய்) 'அக்கா' அன்புமணி (கொஞ்சம் லேடீஸ் சாயல்) 'டொண்டி' பீட்டர் (தங் கச்சிக்கிட்ட இருபது ரூபா திருடிய வன்)... ஆக மொத்தம் அஞ்சு பேரு முடிவு பண்ணோம். என்னது? இன்னொரு ஆள அறிமுகப்படுத் தலையா? அவன் பேர சொல்லவே பயமாயிருக்கு. இப்போகூட அவனை கூப்பிடலாமா? கழற்றி விட்டுடலா மான்னு தான் யோசனை. படத்தோட ரீரிக்கார்ட்டிங் போல 'திக்' மேட்டர் அவனோட சேர்ந்தே இருக்கும். அதனால அவன் பேரு 'திக்கு' திவாகர்.

அன்னிக்கும் அப்படித்தான் 'மாமு மாமு'ன்னு மூச்சு வாங்க, ஓடியாந்தான். என்னவோ ஏதோன்னு பதறி கேட்டா, பேப்பர்ல பார்...த்...தேன்டா அழகிரி அமைச்சராயிட்டாராமே' என்றான். அவ னைப் போட்டு மொத்து மொத்துன்னு மொத்தினோம். எதையும் இப்படி 'திக்தி'ன்னு தான் சொல்வான். மூணு சம்பவம் சொல் றேன். நீங்களே பைசல் பண்ணுங்க... அவனை எங்க குரூப்பில சேக்கலாமா வேணாமான்னு...

***காட்சி 1 :*** நைட்டு ரெண்டு மணி வரை விழுந்து விழுந்து படிப்பான் (புக்கு மேல தூங்கி தூங்கித்தான்). அப்புறம் பாத்தா பார்டர் மார்க்குல பாஸாவான். எஸ்.எஸ்.எல்.சி. ரிசல்ட் வந்துச்சு. ஸ்பெ ஷல் எடிசன் பேப்பர வாங்கி தன்னோட நம்பரை பாஸான்னு பார்க்குறான். அவ

அமிர்தம் சூர்யா

னைச் சுற்றி அவனோட பேமிலி சனங்க. பாதாள கொலுசு போட்டு கெணத்துல பொருளைத் தேடுறாப்போல பேப்பர்ல கண்ண போட்டு துழாவுறான். 'நல்லா பொறுமையாப் பாரு...' 'உழைப்பு வீணா வாது', 'மனச தளரவுடாதே' - பேக்ரவுண்ட் வாய்ஸ். என்ன நெனச்சானோ மானஸ்தன். பேப்பரை தூக்கிட்டு ஓட ஆரம்பிச்சிட்டான். 'ஐயோ... ஐயோ.. மவனே வாணாடா''ன்னு அவன் அம்மா, 'குளிக்காதே'ன்னு ஹமாம் சோப் விளம்பரம் போல கத்த, குடும்பமே கண்ணீரும் கம்பலையுமாய் பெயிலாயிட்டு தற்கொலை பண்ணிக்கப் போற திவாகர் பின்னால ஓடுது. திவாகர் பக்கத்து தெரு நைட் ஸ்கூல் மாஸ்டர் வீட்டாண்ட போயி நின்னு எல்லோரையும் பார்த்து ஒரு கேள்வி கேட்டான்.

காட்சி 2 : திவாகருக்கு தமிழ் வாத்தியார் செங்கதிர்வாணனோட பொண்ணு ரூபஸ்ரீ மேல கிறக்கம். (என்னது ரூபஸ்ரீயான்னு கேக்கிறீங்களா? நாத்திகம் பேசுற அமைச்சர் பொண்டாட்டி நடுக்கூடத்தில யாகம் வளர்க்கறத நீங்க கேள்விப்படலையா, அதுமாதிரிதான் இதுவும்.) லவ் லட்டர் எழுதி போஸ்ட் பண்ணிட்டான். எங்க அப்பன் குதிருக்குள் இல்லேன்னு கையெழுத்தப்போட்டு. வாத்தியாரு, சாக்கடையில தள்ளினாலும் தள்ளுவேன், உன்ன மாதிரி மரமண்டைக்குத் தர மாட்டேன்னு அவமானப்படுத்திட்டாரு. எல்லார் முன்னாலேயும், அழுதவனை அவமானப்படுத்துறவன் அயோக்கியன். அயோக்கியன் உயிரா இருக்கக் கூடாதுன்னு செய்தும் காட்டிட்டான். அவனோட எங்க நாலு பேரையும் ஸ்டேஷனில்



# ஆவி வந்து அடிச்சதா பதறி, ஜுரத்தில் படுத்தப் படுக்கையாயிட்டான் 'திக்'திவாகர்.

வெச்சு குமுறிட்டாங்க. அந்த 'திக்'கை நெனச்சா 'பக்'ன்னுது. வாத்தியார டெம்ர வரியா சாவடிச்சுட்டான், 'திக்'திவாகர். எப்படியா..?

**காட்சி 3 :** ஆவியை வசியம் பண்ணி வரவழைச்சு பேசுறேன்னு செஞ்சுப் பார்த்தான் 'திக்'திவா. தூக்கு மாட்டி செத்துப் போன சித்தப்பாவோட ஆவியக் கூப்பிட, கரண்ட்ட ஆஃப் பண்ணிட்டான். (ஆவிக்கு இருட்டுத்தான் ஃபேவரட் கலராமே?). சாமி படங்கள துணிய போட்டு மூடிட்டான். (ஆவிக்கு சாமிக்கும் பெரிய பங்காளிச் சண்டையாம். அது வந்தா இவங்க கோவிச்சுப்பாங்களாம்) மெழுகுவர்த்தி மட்டும் ஏத்தி வெச்சு சித்தப்பா படத்துமுன்னால வா... வா...ன்னு கூப்பிட்டான்.

வந்ததுங்க - மூணு நாளா போகவேயில்லை. விடு கலகலத்துப் போச்சு. இதுல இதுக்கு நாங்கத்தா உடந்தையாம். எப்படி வந்தது...?

இப்போ நீங்க சொல்லுங்க அவன மூல சேக்கலாமா வாணாவா?

**காட்சி 1 :** மூச்சுவாங்க திவாகர் சொன்னான் ''ஏன் இப்படி எம் மானத்த வாங்குறீங்க. என் நம்பரை பேப்பர்ல பாக்கத் தெரியிலேன்னு மாஸ்டர்கிட்ட ஓடியாந்தா... பின்னாடியே ஓடி வர்றீங்க''

**காட்சி 2 :** 'திக்' திவாகர் சொன்னான்: ''மாமு, அஞ்சு பைசா வட்டிக்கு பணம் வாங்கி பேப்பர்ல 'கண்ணீர் அஞ்சலி'ன்னு வாத்தியார் செத்துட்டார்னு படத்தோட விளம்பரம் குடுத்துட்டேன். நான் மர மண்டையா? இனி அவரு 'செத்த' செங்கதிர்வாணன்தான்.''

**காட்சி 3 :** இருட்டில தனி ரூம்ல சுவத்தோரம் ஓடின எலியப் பிடிக்க கவ்வுன விட்டு கறுப்பு பூனை பாய, அது குறி தவறி இவன் மடிமேல குதிக்க, ஆவி வந்து அடிச்சதா பதறி, ஜுரத்தில படுத்த படுக்கையாயிட்டான் 'திக்' திவாகர்.



# ஜக்கி வாசுதேவ்



(இதில் இருக்கும் செய்திகள் ஈஷா யோக மையத்தில் ஜக்கிவாசுதேவ் அவர்களோடு அன்றாடம் நெருங்கிப் பழகும் வாய்ப்பு பெற்ற பிரமச்சாரிகளிடமிருந்து சேகரித்தவை. மீடியாவில் தங்களை வெளிப்படுத்திக் கொள்ளக்கூடாது என்பது அவர்கள் கடைப்பிடிக்கும் கட்டுப்பாடு)

ப்ளஸ்

● பெற்றோர் வைத்த பெயர் ஜகதீஷ். அப்பா வாசுதேவ் பெயரும் சேர சத்குரு ஜக்கி வாசுதேவ்.

● அப்பா டாக்டர்... ஜக்கியையும் டாக்டராக்க வேண்டும் என்பதுதான் அவரது ஆசை. ஆனால் ஜக்கி படித்தது ஆங்கில இலக்கியம் பட்டப் படிப்பு.

● இளைஞனாக இருந்த போது, அவரை மிகவும் பாதித்த புத்தகம் காரல் மார்க்ஸின் "தாஸ் கேப்பிடல்". இன்று ஈஷா நடத்தும் கிராமப் புத்துணர்வு இயக்கத்துக்கு, அன்றே ஜக்கியின் மனதுக்குள் விதையைப் போட்ட புத்தகம் அதுதான்.

● கட்டடக் கலையின் மீது மிகுந்த ஈடுபாடு. கட்டடக் காண்ட்ராக்டராகவும் இருந்தவர். ஈஷா யோக மையத்தில் காட்டேஜ் கதவு கைப்பிடியிலிருந்து வளாகத்தின் வெளிகேட்டிலுள்ள கொக்கி வரை ஒரு அழகுணர்வு மிளிர்கிறது என்றால், அவர் கட்டடக் கலையின் மீது காட்டும் ஆர்வம்தான்.

● இளமையில் கோழிப் பண்ணை நடத்திய அனுபவம் உண்டு.

● இளைஞனாக இருந்தபோது, காடு மேடுகளில், நாடு முழுக்க மோட்டார் சைக்கிளில் அலைந்து திரிந்தவர்.

● தேர்தலில் வோட்டு போடுவதில் ஆர்வம். "முன்



# பாம்புகளுடன் விளையாடும் வாசுதேவ்!

னுரிமையை நிராகரித்து விட்டு, வரிசையில் நின்று தான் போடுவார். எந்த ஒரு பொது இடத்திலும் மக்களில் ஒருவராக நடந்து கொள்வது ஜக்கியின் தனிப்பாணி.

● கம்பு, ராகி, கேழ்வரகு - இவைகளிலிருந்து தயாரிக்கப்படும் உணவுப் பொருட்களை விரும்பிச் சாப்பிடுவார். நேரமும் இருந்து, மாவும் இருந்தால், ஜக்கியின் கைவண்ணத்தில் முறுகலான தோசை தயாராகி விடும். இவர் ஒரு தோசைப் பிரியர்.

● கோல்ஃப், வாலிபால், கிரிக்கெட் ஆகிய விளையாட்டுக்களில் மிகுந்த ஆர்வம். யோகா மையத்தில் இருக்கும்போது மாலையில் நேரம் கிடைத்தால் ''நெட்டைக் கட்டுப்பா'' என்று வாலிபால் ஆடக் களத்தில் குதித்து விடுவார்.

● தாம் உடுத்தும் ஆடைகளைத் தாமே தேர்ந்தெடுத்துக் கொள்வார். ஒரு சமயம் ஜீன்ஸ், டீ-ஷர்ட், சன் கிளாஸ் என்று வளையவரும் ஜக்கி - வேட்டி, பஞ்சகச்சம், ஜிப்பா என்று பாரம்பரிய உடையிலும் அசத்துவார்.

● யாரும் காலில் விழுவது பிடிக்காது. (ஆனால் தடுத்தாலும் விழுகிறார்கள்). கோபமா... மூச்...!

● சிரகத் தண்ணீரும் சுக்குக் காப்பியும் எப்போதும் தயாராக இருக்க வேண்டும்.

**மைனஸ்**

● ஜக்கி காரை ஸ்டார்ட் செய்தால் யோக மையத்தில் உள்ளவர்களுக்கு ஹார்ட் பீட் எகிறும். தேசிய நெடுஞ்சாலையெனில் வேகம் மணிக்கு 140 கி.மீ. யைத் தொடும்!

● படிக்கும் போதே பாம்புகளைப் பிடித்து வருமானத்திற்கு வழி தேடிக் கொண்டவர். இப்போதும், விஷப் பாம்புகள் உட்பட எல்லா வகைப் பாம்புகளையும் பிடித்துக் கழுத்தில் மாலையாகப் போட்டுக் கொள்ளும்போது ''குரு மேல் உள்ள பாசத்தால்'' அன்பர்கள் ஆடிப் போய் விடுகிறார்கள்.

● யோகா மையத்தைப் பற்றி அவதூறுகளோ, தவறான செய்திகளோ மீடியாவில் வரும்போது, அவற்றை மறுக்க வேண்டும் என்று பரபரப்பைக் காட்டும் சிஷ்யர்களை அமைதிப்படுத்துவது. ''நம் மடியில் கனமில்லை; எனவே கவலையில்லை'' என்பது ஜக்கியின் அணுகுமுறை.

● தாம் மட்டும் ஆசனத்தில் அமர்ந்துகொண்டு, பத்திரிகையாளர்களைத் தரையில் அமர வைத்து பேட்டி அளிக்கிறார் என்பது சில பத்திரிகையாளர்களின் வருத்தம். உள்ளூர் பத்திரிகையாளர்களோடு இன்னமும் ''ரேப்போ'' வைத்துக் கொள்ள வேண்டும் என்பதும் அன்பர்கள் சிலரின் கருத்து.

- ஸ்ரீநி

**வ**னத்தின் சாயலோடு விதவிதமான விருட்சங்கள், மயக்கும் மலர்செடிகள், புல்தரை, கோடைக்காற்றின் வெப்பத்தை உறிஞ்சி குளுமையாக்கி தரும் சூழலுக்கு நடுவே சூப்பரா வீற்றிருக்கிறது... செங்கல்பட்டிலுள்ள வித்யாசாகர் மகளிர் கலை அறிவியல் கல்லூரி.

கல்கியின் ஜாலி விஸிட் இம்முறை இங்கே... வித்யாசாகர் கல்லூரி எல்லாவற்றிலும் வித்தியாசம்... விசேஷம், ஆட்டம், பாட்டம், இலக்கியத் திருவிழா, மருதாணி கொண்டாட்டம், கைவினைக் கண்காட்சி, யோகாபோகஸ் அடடே... எல்லாவற்றிலும் கொஞ்சம் அள்ளிப்போட்டு வந்தோம்.. கொஞ்சம் அனுபவிச்சித்தான் பாருங்களேன்.

''வீட்டில நெறைய எறும்பு இருக்குன்னு சொன்னீங்களே! எறும்பு பவுடர் வாங்கிட்டு போங்க!''

''வேண்டாம்பா. இன்னிக்கு பவுடர் வாங்கிட்டு போனா நாளை லிப்ஸ்டிக் கேக்கும்!

- எஸ்.மாலினி



குத்துப்பாட்டையும் கைக்கட்டிதான் பாடுவோம்!



மனைவி : நமக்கு கல்யாணம் பண்ணி வெச்ச ஐயர் செத்துட்டாருங்க!

கணவன் : என் பாவம் அவரை சும்மா விடுமா என்ன?

* * *

''இங்க நாட்டு முட்டை கிடைக்கும்னு போட்டிருக்கே... எனக்கு 'பிரான்ஸ் நாட்டு' முட்டை கொடுங்க அண்ணாச்சி!''

- எஸ்.தனலக்ஷ்மி






**இவங்களுக்காக எழுதியது:**

''என்னப்பா இட்லி சில்லுன்னு இருக்கு?''

''யோவ் இந்த ஓட்டல் பேரு 'ஆரிய'பவன். அப்புறம் எப்படி சூடா இருக்கும்?''

''உங்க பேக்கரியிலே என்னென்ன 'ஃபன்' இருக்கு?''

''எல்லா ஃபன்னுமிருக்கு.''

''கார்'பன்' ஒரு கிலோவும் ரிப்'பன்' ஒரு கிலோவும் கொடுங்க!''

**- இ. சங்கீதா**



''கேரட் சாப்பிட்டா கண்ணு தெரியும்.''

''எனக்குத் தெரியும்!''

''எப்படி?''

''அதனாலதான் எந்த முயலும் கண்ணாடி போட்டுக்கல!''

**- குஷ்பு**



# வித்யாசம்... வித்யாவாசம்... வித்யாசாகர் விஷேசம்!

## சாத்தியமில்லை!

உதிர்ந்த ரோஜா...
உடைந்த கண்ணாடி...
உறிந்த காலங்கள்
இனி இணைவது சத்யமில்லை
உன்னோடு கலந்த என்தன்பை
பிரித்தல் எவருக்கும் சாத்யமில்லை

- கே. கௌசல்யா

## வாழ்வின் கோனார் உரை

விந்தை மிக்க அழகிய முரண்பாடு
அனுதினமும் கறுப்பு வெள்ளையாய்
இரவும் பகலும்.

- அ.ரைஹானா



'உணவில் கலந்திருந்தும்
ஒதுக்கி ஏன் வைக்கிறீர்கள்?
சாப்பாட்டில்கூடவா உங்கள்
சாதித் துவேஷம்'
- வாழைஇலை மேடையில்...
கறிவேப்பிலை முழக்கம்.

- டி. இந்துமதி





வித்யாச வெளிப்பாடும் வித்யாசாகர் பெண்!



Miss. பிரபலம்!



சுனிதா சர்மா



பார்வதி



கல்யாணி

தங்க மங்கைகள்...

பல்கலைக் கழக அளவில்
தங்கப் பதக்கம் பெற்ற
மாணவிகள்...



**கல்லூரி தலைவர், ஹிஸ்திமல் சுரானா :**
"350 மாணவிகள் செஞ்சிலுவைச் சங்கத்தில் உறுப்பினராக இருந்து சமூக சேவை செய்றாங்க. சமீபத்தில் 150 மாணவிகள் இரத்த தானம் செய் தாங்க. கல்வியும் சமூகக் கடமையும் எங்களுக்கு இரு கண்கள்."

**கல்லூரி தாளாளர்: விகாஸ் சுரானா :**
"வித்யாசாகர் அறக் கட்டளை மூலம் கல் லூரியில் சேர்ந்த பின், ஒவ்வொரு வகுப் பிலும் முதல் மூன்று இடம் பெறும் மாணவி யருக்கு 50% கல்விக் கட்டணச் சலுகை போல் என்.எஸ்.எஸ்., என்.சி.சி.யில் சாதனை படைத்தவர்க்கும் குறிப்பிட்ட கல்விக் கட்டணச் சலுகை உண்டு."



**சுரேஷ் கன்காரியா (பொருளாளர்):**
"ஒவ்வொரு பல்கலைக் கழகத் தேர்விலும் 20க்கும் மேற்பட்டோர் நூறு மதிப்பெண் பெறுவதும் கணிசமான மாணவியர் நூற்றுக்கு நூறு பெறுவதும் இக்கல்லூரியின் சாதனை."



**ஜி. ஆச்சார்யா, இயக்குனர் :**
"வேலை வாய்ப்பு சம்மந்தமான கருத் தரங்கு நடத்து கிறோம். விப்ரோ, வின்டெக், தான் பொண்டேசன் போன்ற நிறுவனங் களின் மூலம் வேலை வாய்ப்பை பெற்று தருகிறோம்."



# நூற்றுக்கு நூறு சாதாரணம்!

**67 புத்தகங்கள் எழுதி 3 தமிழக முதல்வர்களிடம் விருது வாங்கிய கல்லூரி முதல்வர் : கலைமாமணி. டாக்டர். கரு.நாகராஜன். :**

"2005-ல் 130 மாணவிகளு டன் தொடங்கப்பட்ட இக் கல்லூரி தற்போது 1,500 மாணவிகளுடன் 10 இளநிலை படிப்பும் 2 முதுநிலை வகுப்பு களோடும் இயங்குகிறது. வரும் கல்வியாண்டு முதல் மாலை நேரக் கல்லூரியில் பி.சி.ஏ மற்றும் பி.காம் வகுப்புகள் செயல்பட உள்ளன. இங்கு படித்த நூற்றுக்கு மேற் பட்டோருக்கு கால்சென்டர்களில் வேலை ஏற்பாடு செய்யப் பட்டுள்ளது. சுய வேலைக்கான வகுப்புகளும் நடத்தப்படு கின்றன.



**நல்வழிப்படுத்துவது யார்?**
காலேஜ் வரைதான் பேராசிரியர்கள்.
காலம் முழுக்க பேரண்ட்ஸ்தானே?
சலிப்பும் ஈகோவும் கடைசி வரை
காட்டாமல் நல்வழிக்கு ஆசைப்படுவது
நம்ம அப்பா அம்மாதானே?



கரடுமுரடான கல்லையும் சிலைய
செதுக்கும் ஆற்றல் பேராசிரியர்க்கு உண்
பாகுபாடு பாக்காத பஞ்ச பூதம் நமக்கு
தெரியும் - அதேபோல்... சமமாக நம்மை
உயர்த்த ஆண்டவன் நமக்களித்த ஆறாவது
பூதம் ஆசிரியர்கள்.





# நல்வழிப்படுத்துவது யார்தான்?

நடுவர் : பேராசிரியர் **கே.வெங்கடேசன்**

பெற்றோர்கள், குழந்தைகள் தவறைப் பொறுத்துக் கொள்வர். ஆசிரியர் மட்டும்தான் அதைத் திருத்தப் பார்ப்பார். இந்த உலகத்தின் மகா மாற்றங்கள் ஆசிரியர்களாலேயே நடைபெற்றிருக்கிறது.

**நிகழ்ச்சியை ஒருங்கிணைத்த பேராசிரியைகள் (தூள் கிளப்பிட்டாங்க).**






செய்தி : **ஆர்.பாலா**
படங்கள் : **அமிர்தா**



9. நமது இரத்தம் குடிக்கும் மினி டிராகுலா (2)

10. மர்ம நாவலாசிரியர்களுக்குப் பிடித்த நேரம் (4)

11. சூடான இட்லியில் காணப்படும் பயங்கரம் (2)

13. நெருப்புக் காயங்களுடன் போராடு பவர்களை வாழை......யில் படுக்க வைத்து சிகிச்சை அளிப்பதுண்டு (2)

### இடமிருந்து வலம்

1. குளியலறையில் மங்கை - கொலை காரன்... கொன்னுட்டாரய்யா ஹிட்ச்காக் (3)

5. இருமல் ஒலியா? 'போட்டுத் தள்ளு!' (2)

6. ஜாவர் சீதாராமனின் மர்ம உச்சம், ................., ................... ஆனந்தி (3,3)

8. 'எண்டமூரி'யின் மாஸ்டர்பீஸ் 'துளசி...' (3)

12. ஒருவிதத்தில் தடயம் (3)

13. வீணை மீட்டிய விரல்கள் இயக்கிய மர்மத் திரைப்படம் 'நடு...' (4)

14. ஸ்ரீபெரும்புதூரில் இதைத்தானே சுமந்து நின்றாள் தனு (2)

15. கேரளாவில் பிரபலமான பயங்கர மோகினி (3)

### மேலிருந்து கீழ்

2. திகில் எழுத்தாளர் புஷ்பநாத்தின் முன்பாக ஒட்டிக்கொண்ட ஊர் (5)

3. இதில் செய்த விக்கிரகங்கள் 'ஓலைச் சுவடி நாவல்களில்' இடம் பெறுவது வழக்கம். (4)

4. 'சக்கர' அலறல் (2)

5.... வாய்ப் பிசாசு (3)

7. பூதங்களுக்கு இல்லாதது? (3)



## பயங்கரமா யோசிக்க வேணாம்!

*சரியான விடைகளைக் கண்டுபிடிச்சு எழுதுங்க. தபால் உறையின் மீது கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்புங்க. சரியான விடைகளை ஒன்றுக்கு மேற்பட்டோர் அனுப்பி இருந்தால் குலுக்கல் முறையில் ஒருவருக்குப் பரிசு!*

*ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.*

*இறுதி நாள் 27.4.2010*

பெயர் : .......................................

முகவரி : .......................................

.......................................

....................... வயது : ..........

கல்கியில் விரும்புவது .......................

'திக் திக்' குறுக்கெழுத்துப் போட்டி

கல்கி

47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

**18.4.2010** கல்கி இதழில் வெளியான வெளிநாட்டுப் பல்கலைக்கழகம் வேணுமா... வேண்டாமா...? கட்டுரை இன்றைய மாணவர்களையும் பெற்றோரை யும் உஷார்படுத்திய, உண்மையான செய்திகளைக் கொண்ட நடுநிலையான பகுதி!

**- வி.சி.வெங்கடேஷ், திருச்சி-2.**

**ஒ**ரே ஷாட் - ஒரே கதை என்று சினிமா வில் ஒளிப்பதிவில் தற்போது உள்ள புதிய முறைகளை அள்ளி விளக்கும் ஒளிப்பதி வாளர் மனோஜ் பரமஹம்சா பேட்டி செம இளாரிட்டி!

**-ஏ.பி.எஸ்.ரவீந்திரன், நாகர்கோவில்.**

**தி**ரிபுரங்களையும் மலையாகக் கொண்டவன் அம்பாள் என்பதற்குக் கொடுக்கப்பட்ட விளக்கம், அவளுக்கு சூடப்பட்ட மாலையாக ஜ்வலிக்கிறது.

**- பத்மஜா வாசுதேவன், சென்னை-113**

**'ரா**மன் எத்தனை ராமனடி' என்பது போல் இட்லி எத்தனை இட்லியடி என பாடத் தோன்றியது லதா சேகரின் டேஸ்டி டூர் படித்ததும்.

**- சி.எஸ்.ஸ்ரீனிவாசன், சென்னை-40**

**ஆ**பாசமாக எழுதுவதையே பிழைப் பாகக் கொண்டிருக்கிறது, ஒரு பெண்கள் கோஷ்டி! கவிதைகளில் இவர்களின் அட்ட காசம் தாங்க முடியவில்லை என்பது உண்மைதான்.

**-கே.தெய்வசிகாமணி, சென்னை-5**

**கல்கி (www.kalkionline.com) இணைய இதழில் இந்த வாரம் சிறந்த கடிதமாக எதுவும் தேர்வாகவில்லை. (வாசகர்கள் www.kalkionline.comக்கும் வட்டமேஜை கடிதம் அனுப்பலாம்)**

**உ**னக்கு 28, எனக்கு 68 சிறுகதை அருமை. அந்தத் தாயின் எண்ணம் மிகச் சரியானதே.

**-எஸ்.காமாட்சி, சென்னை-61**

**த**மன்னா பற்றிய கேள்விக்கான பதி லில், 'தமன்னா கூறியிருப்பது அவநம்பிக் கையின் வெளிப்பாடே' என்ற தராசின் பதில் தவறானது. ஏனெனில் தற்போது வரும் படங்கள் எல்லாம் மசாலா பாணி தான். நடிப்புக்கு எங்கே இடமிருக்கு?

**-கு.ப.இரகுநாதன், பூவிருந்தவல்லி**

**இ**ன்னா தலைவா! நான் படம் பாத் துட்டு டைரியில அதன் விமர்சனத்தை எப்படி எழுதி வச்சேனோ அதே மாதிரியே நீயும் விமர்சனம் செஞ்சு எழுதி இருக் கியே.. என் டைரியை எப்ப வந்து தொறந்து பார்த்தே... 'அங்காடி தெரு' பட விமர்சனத்தைச் சொல்றேன்.

**-செல்.பச்சமுத்து, பெரம்பலூர்**

**ப்**ளஸ் டு தேர்வு எழுதியுள்ள என் நண் பரின் மகனுக்கு கல்கியின் 'கல்வி ஸ்பெஷல்' சிறப்பிதழைக் கொடுத்தேன். அவன் அடைந்த மகிழ்வை விவரிக்க வார்த்தை தேடிக் கொண்டிருக்கிறேன்.

**- என்.சண்முகம், திருவண்ணாமலை.**

**வ**ண்ணநிலவனின் உள்ளும் புறமும் தொடர் ஆரம்பமே ஜிவ்வென்று ரன்வே யில் வேகம் எடுத்து ஓடும் விமானத்தைப் போல் செம ஸ்பீடு!

**- சாந்தி சுந்தர், நெய்வேலி**

**சை**தை துரைசாமியின் பணி பாராட்டு தலுக்குரியது. கொள்கைகளை உருவாக்கு

பவர் அரசியல்வாதி. அதைச் செயல்படுத்து பவர் அதிகாரி. நல்ல அரசியல்வாதியும், நல்ல அதிகாரியும் இணைந்தால் மக்களுக்கு நிறைய நன்மைகள் செய்ய முடியும் என்பது 100க்கு 100 உண்மை.

-ஜி.சுந்தரராஜன், வேளச்சேரி

**ஐ.**ஐ.எம். மார்க்கெட்டிங் துறை பேராசிரியர் வோராவின் வித்தியாசமான சிந்தனை மனம் கவரும்படியாக இருந்தது. அவருடைய மறைவு வேதனையாக இருந்தது. - எஸ்.ராமசாமி, ஈரோடு.

''**கா**லாவதி மருந்துகள் விற்பனை தொடர்பான வழக்கில் கைதானவர்களை நீதிமன்ற வளாகத்தில் வழக்கறிஞர்கள் தாக்கியது, வழக்கறிஞர்களின் கௌரவத்தினைக் காலாவதியாக்கும் நடத்தை'' என்ற 'தராசு'வின் பதில், மிகவும் கண்டிக்கத்தக்கது. வழக்கறிஞர்களின் இந்தத் தாக்குதலால், மக்கள் மத்தியில் அவர்கள் மதிப்பு உயர்ந்தேயுள்ளது என்பதே உண்மை.

- வே.ந.கதிர்வேல், வேலூர்-6.

**ப்**ளஸ் டூ தேர்வு எழுதி ரிசல்ட்டுக்குக் காத்திருக்கும் என்னுடைய எல்லா சந்தேகங்களையும் ஒட்டுமொத்தமாய்த் தீர்த்து வைத்தது கல்கி - கல்வி ஸ்பெஷல்.

-டி.எம்.சுரேந்தர், திண்டுக்கல்-1.

## பரிசுக் கடிதம்

**கிழக்குப் பதிப்பகம் வழங்கும் ரூ.250 மதிப்புள்ள நூல்கள் பரிசு பெறும் கடிதம்:**

**ஸ்**டாலினோ, அழகிரியோ, கனிமொழியோ யாரும் முக்கியமில்லை. கட்சிதான் முக்கியம்.

சில இடைத்தேர்தல் வெற்றிகளுக்காகவும், மத்தியில் அமைச்சர் பதவிகளுக்காகவும், குடும்பத்தினரையே முன்னிலைப்படுத்துவது அவப்பெயரை மட்டுமல்ல, கட்சியின் எதிர்காலத்தையே பாதிக்கும். இப்போது கூட கலைஞர் சரியான முடிவை எடுக்க முடியும்.

- கண்மணி, நெல்லை.

# டைரியை ஏன் திறந்து பார்த்தீ?

# உயிரைக் கையில் பிடிச்சுக்கிட்டு...

## - எமர்ஜென்ஸி ஆபரேஷன் திக் திக்

ஓப்பன் ஹார்ட் சர்ஜரி, பைபாஸ் சர்ஜரி எல்லாம் இன்று கார்டியாக் சர்ஜன்களுக்கு ஐஸ்கிரீம் சாப்பிடுவது போலச் சாதாரணமானவை! அவர்களே கூட டென்ஷனாவது திடீரென்று வரும் எமர்ஜென்ஸி கேஸ்களின்போதுதான். "கணநேரத்தில் முடிவு செய்து, மார்புப் பகுதியைத் திறந்து, இதயத்தில் என்ன பிரச்னை என்று பார்த்து சிகிச்சை அளிக்க வேண்டும்..." என்கிறார் அப்போலோ மருத்துவமனையின் இதய அறுவைச் சிகிச்சை நிபுணரான டாக்டர் சுந்தர். நோயாளிகளின் உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு ஓடிய அவரது அனுபவங்கள் சில:

"சில கேஸ்களில், ஆபரேஷன் வெற்றிகரமாக முடிந்து, அவசர சிகிச்சைப் பிரிவிலிருந்து பொது வார்டுக்கு வந்துவிட்டிருப்பார் நோயாளி. இதோ நாளைக்கு டிஸ்சார்ஜ் ஆகிவிடலாம் என்று எல்லோரும் நிம்மதியாக இருக்கும்போது, திடீரென்று ரத்தக் குழாயில் அடைப்பு ஏற்பட்டு, நெருக்கடி ஏற்பட்டு விடும்; நாடித் துடிப்பு தடாலடியாய் இறங்கிவிடும்; இதயத் துடிப்பு குறையும். நோயாளி மயங்கி விழுந்துவிடுவார். உடனே வார்டில் இருக்கும் நர்ஸ், டாக்டர்கள் இதயத்தை மசாஜ் செய்தும், இன்னும் சில எமர்ஜென்ஸி வழிமுறைகளைக் கையாண்டும், மீண்டும் இதயத்தைத் துடிக்க வைக்க முயற்சி செய்வார்கள். அதற்குப் பலனில்லாத நிலையில் மீண்டும் இதயத்தைத் திறந்து, ரத்தக்குழாயில் உள்ள அடைப்பை நீக்க வேண்டிய கட்டாயம் ஏற்படும். இவை எல்லாம் உண்மையிலேயே திக்... திக் தருணங்கள்தான்.

* ஹார்ட் லங் மெஷின்

நான் இங்கிலாந்தில் பணியாற்றியபோது, கருப்பை நீக்கப்பட்ட ஒரு பெண், ஆஸ்பத்திரியிலிருந்து வீட்டுக்குச் செல்ல வேண்டிய நாளுக்கு முன் தினம், திடீரென்று மயக்கமாகிவிட்டார். எமர்ஜென்சியாக இதயத்துக்கு மசாஜ் அளித்தும் பயனில்லை. ரத்தக் குழாயில் திடீரென்று ஏற்பட்ட அடைப்புதான் காரணம் என்று தெரிந்துவிட்டது. நோயாளியை ஆபரேஷன் தியேட்டருக்கு எடுத்துச் செல்லக்கூட நேரமில்லை.

வார்டிலேயே, அந்தப் பெண்மணியின் நெஞ்சைத் திறந்து, இதயத்துக்கு வரும் முக்கிய



ரத்தக்குழாயைக் கீறிட... திடமான ரத்த அடைப்பு, கீறின துளை வழியாக வெளியே வந்தது. உடனே, விரலால் ரத்தக் குழாயில் உள்ள ஓட்டையை அழுத்தி மூடிக்கொண்டே, இதயத்துக்கு கையால் மசாஜ் கொடுக்க இதயம் இயங்க ஆரம்பித்தது! அடுத்து, ஆபரேஷன் தியேட்டருக்குக் கொண்டு போனோம். ரத்தக் குழாயை அடைத்துப் பிடித்துக் கொண்டே நானும் கூடவே போனேன். தியேட்டரில் வைத்து, ரத்தக் குழாயில் இருக்கும் துளையைத் தைத்து, வெற்றிகரமாக மூடி, பேஷண்டை பிழைக்க வைத்தோம்.

**சி**ல மாதங்களுக்கு முன் வேறு ஒரு ஆஸ்பத்திரியில் இருந்த ஒரு ஹார்ட் அட்டாக் நோயாளியின் இதயச் சுவர் கிழிந்துவிட்டது. மிக விரைவாக ஆம்புலென்சில் அவரை இங்கே (அப்போலோ) கொண்டுவந்து, நெஞ்சைத் திறந்து, கிழிந்த இதயச் சுவரைக் கையால் மூடியபடி, ஹார்ட்-லங் மெஷினுடன் இணைத்துவிட்டு, கிழிந்த இதயச் சுவர்ப் பகுதியைத் தைத்து, அவரைப் பிழைக்க வைத்தோம்.''

பொதுவாகவே, இதயத்தில் வால்வுகள் பழுதடைந்து, ஓப்பன் ஹார்ட் சர்ஜரி செய்யும்போது, ஒரு கட்டத்தில் இதயத்தின் இயக்கத்தை நிறுத்தித்தான் ஆகவேண்டும். அப்போது இதயத்தின் பணியை 'ஹார்ட்-லங்' மெஷின் செய்யும். அந்தச் சமயத்தில், சர்ஜரி வெற்றிகரமாக முடிந்தாலும் கூட, மீண்டும் ரத்தக் குழாய்களை இதயத்துடன் இணைக்கிறபோது, அது பிரச்னை ஏதுமில்லாமல் மீண்டும் ஒழுங்காகச் செயல்பட வேண்டுமே என்ற திகில் இருந்துகொண்டேதான் இருக்கும். இப்படி மிகவும் சிக்கலான சூழ்நிலையில் இதயத்தை அதிரடியாகத் திறந்து ஆபரேஷன் செய்வதை 'மெடிகல் எமர்ஜென்சி ரூம் தொரகாட்டமி' என்று சொல்வார்கள்.''



✱ டாக்டர் சுந்தர்

சந்திப்பு: **எஸ்.சந்திரமௌலி**

# 20-20 அசத்தும் அனுபவசாலிகள்...

தெண்டுல்கர் போன்ற பெருசுகளால் 20-20-யில் சாகசம் எதுவும் செய்துவிடமுடியாது என்கிற கூற்று இப்போது தவிடுபொடியாகியிருக்கிறது. 20-20 போட்டிக்கு லாயக்கே இல்லை என்று சொல்லப்பட்டவர்கள்தான், இந்த வருட ஐபிஎல்-ல் சாதித்துக் காட்டியிருக்கிறார்கள். கிரிக்கெட்டுக்குத் தேவை இளவயதல்ல, மங்காத திறமை மட்டும்தான்.

2007ல் நடந்த 20-20 உலகக்கோப்பையில் சச்சின், திராவிட், கங்குலி ஆகியோர் கலந்துகொள்ளவில்லை. இறுதியில் தோனி தலைமையில் ஆடிய இளைஞர்கள் உலகக்கோப்பையோடு நாட்டுக்குத் திரும்பினார்கள். இதனால் இளைஞர்களுக்கு ஆதரவாகப் பல முடிவுகள் எடுக்கப்பட்டன. ஒருநாள் போட்டியிலிருந்து திராவிட், கங்குலி, கும்ப்ளே ஆகியோர் விலக்கப்பட்டார்கள். திறமைசாலிகளுக்கு கொடுக்கப்பட்ட மரியாதையைக் கண்ட சச்சின் 20-20-யிலிருந்து ஓய்வு பெற்றார். ஆனால் ஐபிஎல்-ல் மும்பை அணி உருவாக்கப்பட்டபோது, சச்சின் அதன் தலைவராக ஆனார். தென் ஆப்பிரிக்காவைச் சேர்ந்த காலிஸுக்கும் இதே நிலைமைதான். சச்சின், பாண்டிங்குக்குப் பிறகு உலகின் மிகசிறந்த கிரிக்கெட் வீரராக அறியப்படுபவர் காலிஸ். 20-20 (2007) உலகக்கோப்பை அணியில் அவருக்கு இடம் கொடுக்கப்படவில்லை. ஆனால் அவர்தான் இப்போது பெங்களூரு அணியின் தூணாக இருந்துவருகிறார். அவர் விக்கெட்டை எடுப்பதற்குள் எதிரணியினருக்குத் தாவு தீர்ந்துவிடுகிறது. இப்படி சச்சினும் காலிஸும்தான் எல்லோருக்கும் முன்மாதிரியாக இருக்கிறார்கள்.

கும்ப்ளே ஒருநாள் போட்டிக்கே லாயக்கில்லை, 20-20-க்கு எப்படி சரிபட்டுவருவார் என்றுதான் அவர்மீது விமரிசனம் வைக்கப்பட்டது. ஆனால் இப்போது என்ன நடக்கிறது? கும்ப்ளேவின் பந்துவீச்சுக்கு யாரிடமும் பதில் கிடையாது. கங்குலி கதையும் இதேபோலதான். அவரிடமிருந்து தலைமைப் பதவி பறிக்கப்பட்டபிறகு கொல்கத்தா அணி ஆழ்கடலில் மூழ்கித் தவித்தது. ஆனால் இப்போது படாதபாடு பட்டு தன் அணியைக் கரை சேர்த்துவிட்டார் கங்குலி. இந்த வருடம் சர்வதேசக் கிரிக்கெட்டிலிருந்து ஓய்வு பெறும் முரளிதரனும் சென்னை அணியின் சிறந்த பௌலராகப் பெயரெடுத்திருக்கிறார். வயதானால் என்ன, ஜெயிக்கவேண்டும் என்கிற வெறியும் ஈடுபாடும் இருந்தால், ஒரு காரியத்தைச் சாதித்துக்காட்ட முடியாதா என்ன?



Registered with the Registrar of Newspaper of India under No.1041/57* Registered No.TN/CC (S) DN / 144 / 09 - 11* Licensed
post without prepayment under PMG's Licence No.WPP TN / CC (S) DN / 70 / 09 /11* Registered as a Newspaper in Srilanka.

# புற்றுநோய்க்கு ஒரே இடத்தில் தீர்வு!

## ONE STOP SOLUTION FOR CANCER



- PET CT SCAN
- All Endoscopies
- Linear Accelerator & Brachy Therapy
- Radiation
- IGRT
- Surgical Oncology
- Medical Oncology

- பெட் சிடி ஸ்கேன்
- அனைத்து என்டோ ஸ்கோபி
- கதிர்வீச்சு
- லீனியர் ஆக்ஸிலரேடர் & உட்கதிர்வீச்சு
- IGRT
- புற்றுநோய் அறுவை சிகிச்சை
- புற்றுநோய் மருத்துவம்

**இலவச ஆலோசனைக்கு:**

**(044) 2246 9200**
**(044) 66 300 300**

**PET CT CENTRE AT CANCER INSTITUTE (WIA)**
**CANAL BANK ROAD, GANDHI NAGAR, ADYAR, CH-20**

**24 HRS PHARMACY & AMBULANCE SERVICES AVAILABLE**

# Dr. KAMAKSHI MEMORIAL HOSPITAL



# 1, Radial Road, Pallikaranai, Chennai - 600 100.
Ph: 2246 9200, 66300300 Fax : 22463282 66300400
E-mail: info@drkamakshimemorialhospital.org.
Website: drkamakshimemorialhospital.org.